தமிழும் தமிழ் சார்ந்த நண்பர்களும்...

# தமிழ் நண்பர்கள்

பங்குனி மாதம் விஜய வருடம்



## மின் இதழ்

# இம் மின் இதழில் ...

## தொடர்கள் ...

சிவாஜிதாசன் எழுதும் சாம்ராட் சம்யுக்தன்

சிநேகிதி பூங்கோதை எழுதும் சிநேகிதியுடன் தனிமையில் சில நிமிடங்கள்....

லோகேஷ் ஜெயகோபி எழுதும் அம்முவும் அமிர்தபானையும்

ஆய்க்குடி மணி எழுதும் மௌனங்கள் உயிர்த்தெழுந்தால் கவிதைகள்

கனகீஸ்வரி எழுதும் பெண்ணொருத்தி புலம்புகிறாள்

## ... தமிழீழக் கவிதைகள்

ஜெயராமன், ஜோஷி, மருதூரான், வித்யாபரன் மற்றும் சுபபாலா எழுதிய ஈழக்கவிதைகள்

## சிறு கதைகள் ...

ராஜரமணி, கனகீஸ்வரி எழுதிய சிறுகதைகள்

## ... பட்டறையில் எழுதப்பட்ட கவிதைகள்

வேணுகோபாலன், சுந்தர் புருஷோத்தமன், சபா வடிவேலு மற்றும் பூங்கோதை எழுதிய பட்டறை கவிதைகள்

## திருக்குறள் ...

சுந்தர் புருஷோத்தமன், செந்தமிழ் தாசன் அவர்களது திருக்குறள் கவிதைகள்

## ... ஆன்மிகம்

பூமலை, நாகசுந்தரம், கருணாகரன் அவர்களது ஆன்மிகச்சிந்தனைகள்

## சமையல் ...

பாண்டிமா தரும் சமையல் துளிகள்

இன்னும் பல நண்பர்களால் அலங்கரிக்கப்பட்ட கவிதை மலர்களுடன் …

*வணக்கம் நண்பர்களே!*

*தமிழ் நண்பர்கள் இணையதளத்தில் ஆர்வமுடன் பங்கேற்று தங்கள் படைப்புகளை பகிர்ந்தும் நட்புறவாற்றியும் தமிழைக்கொண்டாடும் அனைவருக்கும் வணக்கம்.*

*இம்மின் இதழ் மூலமாக அனைவரையும் சந்திப்பதில் மகிழ்கிறோம்.*

*தமிழ் நண்பர்கள் தளத்தில் தொடர்ந்து புதிய வசதிகளை அறிமுகப்படுத்தியும் பிழைகளை அறிந்து திருத்தியும் வருகிறோம். பிழை காண்பின் தயவுடன் தெரிவிக்கவும்.*

*இணைந்து செயல்படுவோம்.*

*அனைவர் வாழ்வும் தமிழுடன் நலமாகட்டும்.*

## கவிதை எழுத ஆசையா

"உங்களுக்காகவே கவிதை பட்டறை"

கீழே கொடுக்கப்பட்டிருக்கும் சில சொற்களை கவிதையில் அங்கங்கே வரும்படி ஒரு கவிதை எழுதுங்கள் பார்க்கலாம்.

| சொல் | பொருள் |
|---|---|
| அத்தம் | கை, காடு, பாதி, பொன், வழி |
| வித்தம் | ஞானம், பொருள் |
| கொத்தம் | எல்லை |
| தத்தம் | ஈகை |
| தித்தம் | கசப்பு |
| மத்தம் | மயக்கம் |
| நத்தம் | இருள், ஊர், சங்கு |
| சத்தம், சித்தம், யுக்தம், முத்தம், பித்தம், மொத்தம் | -- |

*கவிதை பதிய வேண்டிய முகவரி*
http://tamilnanbargal.com/node/56628

# பட்டறையில் எழுதப்பட்ட கவிதைகள்

*கடந்தமாதம் வள்ளல், மள்ளல், விள்ளல், கொள்ளார், நள்ளார், உள்ளி, கிள்ளி, கொள்ளி, தெள்ளி, நள்ளி, பள்ளி, புள்ளி, கள், புள், தொள்ளை, மள்ளர் போன்ற சொற்களை கொடுத்து அதை வைத்து கவிதை வடிக்கக் கேட்டிருந்தோம். அதற்கு நண்பர்கள் எழுதிய சில கவிதைகளை இங்கே தருகிறோம்.*

## தமிழ்த்தாய்

### வேணுகோபாலன்

கள்ளையும் தீயையும் சேர்த்து - நல்ல
காற்றையும் வான வெளியையும் சேர்த்து
தெள்ளு தமிழ்ப்புலவோர்கள் நல்ல
தீஞ்சுவைக்காவியம் செய்து கொடுத்தார்
(இதுவும் தலைப்பும் பாரதியுடையது)

பள்ளுப்பாடலினாலும் பல வில்லுப்பாடலினூடும்
பண்ணுடன் அன்னையர் பாடி உறக்கும்
விள்ளரி வித்தகப் பாடலினூடும் -
நொண்டிக் களித்திடும் எம் சிறு பெண்டிர்

எள்ளல் கதைகளினூடும் - மற்றவர்
மயனைப் பழித்து எழிலுறப் புனையும்
வள்ளன்மை கொண்ட புனைவுகளூடும்
வெள்ளைக்கமல நாமகளே போல்
தீந்தமிழ் நல்கிய ஆசான்களூடும்

உள்ளிடும் உள்ளம் உவகையில் மிதக்கும்
ஓராயிரமாயிரம் பாக்களினூடும்
வள்ளுவன் வாய்மொழியாலும் அந்த
அக்கினிக்குஞ்சின் அனல்மொழியாலும்

பள்ளிகள் தோறும் தமிழ்ச்சுவை காட்டல்
படித்திடும் சிறார்க்கு நற்றமிழ் சேர்த்தல்
தெள்ளிய தமிழை செல்லும்வாய் சொல்லல்
தெரிந்திடு நண்பா இவை நாம் செய்யின்

தள்ளிடும் கால வெள்ளத்தை எள்ளி
தரணியில் வாழ்வள் எம் தாய்

## உள்ள உள்ள உருகுதே உள்ளம்

### சபா வடிவேலு

மள்ளல் மாஞாலம் வள்ளலும் ஆமே
புள்ளும், புள்ளியும், தெள்ளியும் போன்றாங்கே
எண்ணாயிரம் கோடி உயிரினம் உண்டெனினும்

மூன்றிலிரு பெரும்பரப்பு முந்நீர் மூடினும்
கொள்ளார் நள்ளார் நல்லார் என்னாது
பல்லுயிர் ஒருங்கே தாங்கிடக் கண்டு
உள்ளிட வியப்பும் மிகுந்திடும் அன்றோ ?
மண்ணும் மாந்தரும் தாகம் தணிந்திட
உண்ணும் உணவுப் பயிர்கள் செழித்திட
கிள்ளி போற்றிய காவிரி இன்று
பள்ளி கொண்ட அரங்கன் முன்பும்
பாலையென வறண்டு கிடப்பது கண்டும்
நீரைப் பிரிந்து வாடும் மணலும்
நித்தம் கொள்ளை போதல் கண்டும்
வஞ்ச மனிதர் நெஞ்சம் போன்றே
வானமும் சுரக்க மறுத்தல் கண்டும்
உள்ளிட உள்ளம் கொள்ளியாய் ஆகுதே
தொள்ளை ஏந்தி மீனம் ஈட்டிட
எல்லை சென்று எளிதில் மீண்டிட
மள்ளர் காக்க மறுப்பது கண்டு
உள்ளி உருகுதல் விள்ளல் ஏலாதே

## வள்ளல் தமிழ்! எல்லாம் வல்ல தமிழ்!!

### சுந்தர் புருஷோத்தமன்

வள்ளல் தமிழின்பத் தேனள்ளி நான் கொள்ள
மள்ளல் போமெந்தன் மனத்தின்கண் விடுபட்டே
விள்ளல் தமிழ்ப் பேற்றை யாவர்க்கு மிங்கென்றால்
கொள்வீர் நள்ளாரு மிங்கிதனைப் போற்றுவராம்.
உள்ளி உள்ளி எந்தன் உள்ளெல்லாங் களிப்பூறி
கிள்ளிச் சோழர்கோ போலஃதும் நிமிர்ந்ததுவாம்
தெள்ளி அசைந்தாடி நடைபயிலும் அழகைப்போல்
கள்ளாய் மயக்குதுவே தமிழெங்கள் தீந்தமிழே.
பள்ளி செல்கின்ற பாலகராய் இருக்குங்கால்
நள்ளி கொண்டெங்கள் நாவினிலே விளையாடி
புள்ளி பெருக்கிற்றே தமிழ்ப்புதல்வர் எமக்கெல்லாம்
புள்ளினமாய் வான் தவழ்ந்தோம் தமிழெங்கள் தாயாலே
தொள்ளை மீதேறிப் பேராழிக் கடந்திங்கே
வெள்ளை மாந்தெரெலாந் தமிழ்நாட்டில் திரிந்தாலும்
பிள்ளைத் தமிழெங்கள் செந்தமிழின் தரந்தாழ்த்தல்
மள்ளர் கூட்டத்துள் மாடுமேய்ப்போன் நுழைதற் போலே....

## தமிழீழத் தற்கொடை வள்ளல்கள்

### பூங்கோதை

தமிழீழத் தற்கொடை வள்ளல்கள்
கிள்ளி நற்படையார் கொடியேந்தி நின்ற
மள்ளர் தமிழீழ மானத்தின் மைந்தர்தமை
உள்ளி நெஞ்சிருத்தித் தொழுகின்ற போது
மள்ளல் மனம் கொண்டு சிந்தும் விழிநீரே
துள்ளி நடை போட்ட தூங்காத கண்மணிகள்
கொள்ளார் சொப்பனத்தில் சிம்மமாய் நின்றவர்கள்
வெள்ளியாய் ஈழத்தின் வான்பரப்பு எங்கும்
விள்ளல் கொண்டனரோ விழி தேடியலையுதையா
உள்ளம் நினைந்துருகத் தம்மை ஈந்தவர்கள்
தெள்ளியணைய பலம்கொண்டு பொருதியவர்
தெள்ளிய கொள்கையுடன் தம்முயிர் ஈந்த
வள்ளல்கள் இவர்போல இனியாரைக் காண்போமோ...

# சாம்ராட் சம்யுக்தன்

சிவாஜிதாசன்

பாகம் 3 - 1. ஆண்டாள்




விண்மீன்களின் அழகையே ரசித்துக்கொண்டிருந்த ரவிவர்மனுக்கு பசி வயிற்றைத் தின்ன, எழுந்து நடக்கத் துவங்கினான். வீதியின் ஓரம் இருளிலேயே நடந்தான். இரவுக் காவலர்கள் வீதிகளில் வலம் வரும் அரவம் கேட்டால் பதுங்கிக்கொண்டு முன்னேற அவனுக்கு நாழிகைகள் பிடித்தன. இவ்வாறு மறைந்து மறைந்து இரண்டு வீதிகளைக் கடந்து விட்டான். 'இன்றிரவு தங்குவதற்கு ஓரிடம் கிடைத்தால் நன்றாக இருக்குமே' என்று மனதினுள் ஏங்கினான்.

நிலவு கூட மேகத்தினுள் மறைந்திருந்த நேரம். கும்மிருட்டு வீதியெங்கும் பரவியிருக்க மெல்ல நடந்த அவனை இரவுக் காவலன் ஒருவன் பார்த்துவிட்டான். உடனே, அவனை நோக்கிக் குதிரையை விரட்டினான். இதை உணர்ந்துகொண்ட ரவிவர்மன், தான் ஒதுங்கியிருந்த ஒரு சிறு வீட்டினுள் நுழைந்துகொண்டான். அவன் அதிர்ஷ்டம் அந்நேரத்தில் வீட்டின் கதவு தாளிடப்படாமல் இருந்தது தான். உள்ளே சென்று பதுங்கிக்கொண்டான்.

நாகவன வீரன் அவ்வீட்டின் முன் குதிரையை நிறுத்தினான். வீட்டுத் திண்ணையில் ஒரு பெண்மணி படுத்திருந்தார்.

"யார் படுத்துக்கொண்டிருப்பது? எழுந்திரு!" என்றான் அதிகாரக் குரலோடு.

அந்தப் பெண்மணி முனகியபடியே எழும்பினார். இந்நேரத்தில் வீரன் வந்திருப்பது அவருக்கு அதிர்ச்சியையும் குழப்பத்தையும் கொடுத்தது.

"இங்கே ஒருவன் பதுங்கி வந்தானே, எங்கே அவன்?" என்றான்.

"அப்படி யாரும் வரவில்லையே" என்றார் அவர் குழப்பத்துடன்

"இல்லை நான் கண்டேனே" என்றான் அவன் மீண்டும்.

"நான் தான் கெட்டுவிட்ட பழைய உணவை இங்கு கொட்ட வந்தேன். அதை பார்த்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன்" என்றார் அவர்.

"பழைய உணவா?" என்று கேட்டபடியே கீழே நோக்கினான் வீரன். பெண்மணி சொன்னபடி அங்கே உணவு கொட்டப்பட்டிருந்தது. தான் தான் தவறாக எண்ணிவிட்டோமா? என்று சிந்தித்தபடி அவரிடம் கூட சொல்லாமல் குதிரையில் ஏறிக் கிளம்பினான் அவன்.

அவன் சென்ற உடன், உள்ளே சென்ற பெண்மணி ஒரு விளக்கை ஏற்றினார். விளக்கு சரியாக எரிகிறதா என்று நோக்கியபடியே, "ஒளிந்திருந்தது போதும். உன்னைத் தேடி வந்த ஆபத்து சென்றுவிட்டது" என்றார்.

"ஆம் எம்மொழி ஆனாலும் நம்மொழி
என நன்மொழி என பழகு -பின்
நம்மொழியே திண் மொழியென,
செம்மொழி இனம் காணும் உலகு..
சிவகவி

அப்பெண் அழைத்ததைக் கேட்டு, இருளில் மறைந்திருந்த ரவிவர்மன் மகுடிக்கு மயங்கிய சர்ப்பம் போல் தீபச்சுடரின் ஒளியில் வந்து நின்றான். 'எப்படி இவர் என்னை கண்டுபிடித்தார்? நாம் இங்கு வந்து ஒளிந்திருப்பது இவருக்கு முன்னமே தெரிந்திருகிறது என்பதில் ஐயமில்லை. ஆனால், ஏன் தன்னைக் காட்டிக்கொடுக்காமல் அந்த வீரனிடம் அவ்வாறு பேசினார்?' என்று ரவிவர்மன் குழம்பிய முகத்துடன் அப்பெண்ணின் முகத்தை ஏறிட்டான்.

முகத்தில் சாந்தமும் புன்முறுவலும் தவழ அவர் ரவிவர்மனின் கலங்கிய முகத்தையே நோக்கிக்கொண்டிருந்தார். அவர்கள் இருவருக்கும் மௌனமே தூது போய்க்கொண்டிருந்தது. இது வரை யார் முன்னாலும் தலை நிமிர்ந்தே பழக்கப்பட்ட ரவிவர்மனின் உடலோ சொல்லமுடியா குற்ற உணர்ச்சியில் குறுகியது.

சலனமற்ற குரலோடு, "யார் தம்பி நீ?" என்றார் அப்பெண்.

'என்ன விடை கூறுவது? அப்படியே கூறினாலும் அது உண்மை என்று நம்புவார்களா?' என்ற எண்ண ஓட்டத்தினுள் போராடியபடி தன் முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

"நான் தவறாக ஒன்றும் கேட்டுவிடவில்லையே?" என்றார் மீண்டும் அப்பெண்.

ரவிவர்மன் தழதழக்கும் குரலோடு பேசத் துவங்கினான்.

"தாயே என்னைக் காட்டிக்கொடுக்காமல் காப்பாற்றியதற்கு எனது நன்றிகள். நான் யார்? எதற்காக வந்தேன்?.என்று கேட்காதீர்கள். என்னால் பதில் கூற முடியாது" என்று அவரைப் பார்க்காமல் வேறு திசையைப் பார்த்துக்கொண்டு கூறினான் ரவிவர்மன்.

## ஈழத்தில் சூரியன்

ஜெயராமன்

ஈழத்து மண்ணில்
இன்றைக்கும் ஓர்
குருச்சேத்திரம்.
பாரத யுத்தம்
பதினெண் நாட்களே
ஈழ யுத்தமோ...

பத்து வயது
பள்ளிச் சிறுவன்
புத்தகப்பையில்
எரிகுண்டு வகைகள்.

புத்தகக் கட்டை
தூக்கி யெறிந்து
துப்பாக்கி தூக்கிடும்
வீரங்கள் அங்கே
கருவிலேயே
விதைக்கப் படுகின்றன.

அங்கே
அபிமன்யுக்கள் மட்டுமே
பிறக்கிறார்கள்.- அவர்கள்
வித்தைகள் கற்பதும்
கருவிலேதான்.

அங்கே
யுத்தத்திற்காகவே
கற்பைச் சுமக்கும்
வீரத்தமிழச்சிகள்.

ஈழத்தமிழனின்
ரத்தத் துளிகள்
அடிவானத்தில்
தெரித்து விழுந்ததால்
ஈழத்தில் சூரியன் கூட
சிவந்தே பிறக்கிறான்...

மீண்டும் அவர்களுக்குள் மௌனம். தன்னைக் காப்பாற்றியவரை மதியாமல் நடந்துகொள்கிறோமே என்ற உணர்வு அவனை வதைக்க, அவனை வறுபுறுத்தும் விதமாக மேலும் கேளவிகளைத் தொடுக்க விரும்பாத அந்தப் பெண்மணிக்கோ ஆபத்திலிருந்து அவனைக் காப்பாற்றிய திருப்தி. குடிசையினுள் வீசிய லேசான தென்றல் தீபச்சுடரைத் தழுவியது. அதனால் லேசாக அசைந்தாடிய சுடர் அணைந்துவிடுமோ என்ற அச்சத்தால் திரியைச் சிறிது வெளியிலெடுத்து சுடர் நன்றாக எரிய வழிவகுத்தார் அப்பெண்.

அப்போது, ரவிவர்மன் தன் வாளை உருவினான். பெண்மணி திகைத்தார். கண்களை அகல விரித்து, சுடரின் ஒளியில் பொன்னிறமாக மின்னும் வாளையும் அவனது முகத்தையும் மாறி மாறிப் பார்த்தார்.

"என்ன தம்பி இது?" என்று அவர் ஏதோ கூற அவர் முற்படுகையில் 'எதுவும் பேசாதீர்கள்' என்பதைப் போன்று சமிக்ஞை செய்தான் ரவிவர்மன். ரவிவர்மனின் செய்கைக்கு அடிபணிந்த அப்பெண்ணின் மனமோ விபரீதம் ஒன்று நிகழப்போகிறது என்று மட்டும் கூறியது.

ரவிவர்மன் அடிமேல் அடி வைத்து அக்குடிசையிலுள்ள சாளரத்தின் வழியே வலது புறமும் இடது புறமும் தன் பார்வையை உலாவவிட்டான். அப்பொழுது அவன் கண்ட காட்சி லேசாக அவனை நடுக்கமுறச் செய்தது. சிறிது தூரத்தில் ஒரு குதிரை மட்டும் தனியாக நின்று குடிசையையே வெறித்துக்கொண்டிருந்தது. அக்குடிசையின் கதவு அருகே நிலவின் ஒளியில் ஒரு நிழல் தெரிந்தது. அதையே சில வினாடிகள் பட படப்போடு வெறித்தான் ரவிவர்மன். அவன் இதயத்துடிப்பு அதிகரித்தது.

நிழல் இயங்கத் துவங்கியது. உறையினிலிருந்து வாளை உருவியது. 'வாசலில் ஒருவன் மறைந்திருக்கிறான்; அவன் வாளையும் உருவிவிட்டான்; இதற்கு மேல் தாமதிக்கக்கூடாது' என்று உணர்ந்த ரவிவர்மன் துரிதமாக இயங்கினான். வாசலில் ஒளிந்திருந்தவனின் முன்னால் மின்னல் வேகத்தில் தோன்றி அவன் குரல்வளையை அறுத்தான் ரவிவர்மன்.

நொடிப்பொழுதில் இவ்வளவு வேகத்தில் ஒருவனை சாதரணமாக கொன்று தீர்த்த ரவிவர்மனை அதிர்ச்சியாகவும் பயந்த முகத்தோடும் பார்த்தார் பெண்மணி. அவரால் கத்தமுடியவில்லை. அவன் குரல்வளையை அறுக்கும்போது வந்த லேசான மரண ஓலம் அவர் கண்களில் நீர் துளிர்க்க வைத்தது. இறந்த உடலை குடிசையினுள் தூக்கி வந்து ஓரிடத்தில் வைத்தான் ரவிவர்மன். பிறகு, பயந்து வெளிறிப்போன அப்பெண்ணின் முகத்தை உறுதியான பார்வையுடனும் மன்னிப்பு கோரும் பாவத்துடனும் பார்த்தான் ரவிவர்மன்.

"தாயே! என்னை மன்னியுங்கள்! நான் இவ்வாறு செய்யாவிடில் இவனுக்கு ஏற்பட்ட கதி நமக்கு நேர்ந்திருக்கும்"

பெண்மணி கீழே கிடத்தப்பட்டிருக்கும் உடலை நோக்கினார். சிறிது நேரத்திற்கு முன் தன்னிடம் விசாரித்த அதே வீரன் தான் அவன் என்பதை நொடிப்பொழுதில் தெரிந்துகொண்டார். பிரேதத்தின் கண்கள் இன்னும் மூடாமல் இருப்பதையும் அவனுடைய கண்கள் குடிசையின் விட்டத்தை வெறித்தபடி இருப்பதையும் கண்ட அவர், சகிக்கமுடியாமல் பிரேதத்தின் மீதிருந்து பார்வையை விலக்கிக்கொண்டார்.

"தாயே! இந்த உடலை இரவு முடிவதற்குள் மறைத்துவிடவேண்டும். இங்கு புதைப்பதற்கு மறைவான இடமிருக்கிறதா?"

பெண்மணி, ரவிவர்மனை கொதிக்கும் மனதோடும் எரியும் விழிகளோடும் முறைத்தார். ஆண்டவன் கொடுத்த உயிரைக் கொல்வதற்கு இவனுக்கென்ன உரிமை இருக்கிறதென்று தனக்குள் கேட்டுக்கொண்டார். ஆகையால், எதுவும் பேசாமல் மௌனமாகவே இருந்தார். அவன் கையிலுள்ள வாளையும் அதில் வழிந்துகொண்டிருக்கும் குருதியையும் நோக்கினார்.

"வாளை எடுத்தோம்; கழுத்தை அறுத்தோம் என்று கொன்றுவிட்டாயே? வீரபுர வீரனுக்கு இது தான் அழகா?"

ரவிவர்மன் திகைத்தான். 'இவர் எனன சூனியக்காரியா? அல்லது மாய மந்திரம் புரிபவரா? தான் வீரபுரத்தவன் என்பதை எதை வைத்துக் கண்டுகொண்டார்?' என்று

தனக்குள்ளாகவே கேட்டுக்கொண்டான்.

## கவிதைக்குறள் திருக்குறள்தெளிவுரை

செந்தமிழ்தாசன்

அறம்-பாயிரம், இரண்டாம் அதிகாரம் - வான்சிறப்பு

**15.** கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை.

பெய்யாது கெடுத்து
யாரும் வையாது
கொடுக்கும் மழை...

வையத்துள் வாழ்வாரை
தான் பொழியாது
துவளச் செய்து
பொதிந்து கிடப்பதும்
அப்போது பழித்தோரை
மெத்தப் பெய்து
ஆட்கொள்வதும் எல்லாம்
உடையது மழையென்பதே........

**16.** விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது.

மழைநீர் மேகக்கூட்டம்
மண்ணிற்குத் துளி
துளியும்
தராது போனால் - ஈங்கு
பசும்தளிரும் புல்லும் பூண்டும்
மண்ணில் துளிர்க்காது
பச்சைநிற ஆடை
மரணமேற்கும்....

ஓரறி உயிர் முதலாய்
முடக்கம் கொள்ளும்
ஏதுயிர்க்கும் ஏழ்மை
வந்துசேரும்...

"தாயே!" என்றான் கலங்கிய கண்களோடு.

"உனது வாளின் முத்திரையை வைத்து நீ வீரபுரத்தைச் சேர்ந்தவன் என அறிந்துகொண்டேன். குடிசையின் கொல்லைப்புறத்தில் மரங்கள் நிறைந்த காடு இருக்கிறது. அதில் உடலைப் புதைத்துவிடு. வெகு தூரத்திலிருந்து வந்திருப்பாய் போலிருக்கிறது. சிறிது கண்ணுறங்கு" என்று கூறியபடி வெளியில் உள்ள திண்ணைக்குச் சென்றாா்.

திடீரென்று அவரின் மாற்றத்திற்கு காரணம் புரியாமல் விழித்தான் ரவிவர்மன். அவர் தனக்கு உதவி செய்கிறார் என்பதைப் புரிந்துகொள்ள வெகுநேரமாகவில்லை அவனுக்கு. காரணம் தெரியவில்லையென்றாலும் நிச்சயம் அதில் காரணம் ஏதோ ஒளிந்திருக்கிறது. இப்பொழுது நமக்கு உறக்கம் தேவை தான் என்று மனதினில் எண்ணியபடி துயிலில் இறங்கினான். அவனது வலது கரம் வாளின் மீதும் அவனது எண்ணங்கள் அடுத்து என்ன நடக்கப்போகிறதோ என்ற மாய சுழற்சியிலும் இருந்தன.

நடுசாமம் கடந்து இரண்டு நாழிகைகள் கடந்த சமயம் அவன் தோளினை யாரோ உலுக்குவதைப் போலவும் துயிலை யாரோ கலைப்பது போலவும் கனவு கண்டான். அவனது இமைகள் திறந்தன. அது கனவில்லை நிஜம்; பெண்மணி தான் அவன் துயிலைக் கலைக்கப் போராடிக்கொண்டிருந்தார்.

"தம்பி, சீக்கிரம்! இவ்வுடலை மறைக்கும் நேரம் வந்துவிட்டது. இப்பொழுது காவல் வீரர்களின் ரோந்து குறைந்திருக்கும். இந்த உடலை நீ கொல்லையின் பின்புறமாக உள்ள காட்டினில் புதைத்து விடு" என்றார்.

மறுபேச்சு பேசாமல் உடலைத் தன் தோளில் சுமந்து குழி தோண்ட உதவும் கருவிகளை எடுத்துக்கொண்டு வாசலை நோக்கிப் புறப்பட்டான்.

"நில்!" என்றார் அவர்.

ரவிவர்மன் திரும்பிப் பார்த்தான்.

"மறவாமல் உன் வாளையும் இவ்வுடலுடன் சேர்த்துப் புதைத்துவிடு" என்றார்.

அவனும் 'சரி' என்பது போன்று தலையசைத்து குடிசையின் பின்னாலிருக்கும் காட்டினுள் சிறிது தூரம் நடந்து ஓரிடத்தில் உடலை வைத்தான். புதர்கள் மண்டிக் கிடந்த ஓரிடத்தைத் தேர்வு செய்து அவசர அவசரமாக குழி தோண்டினான். வியர்வைத் துளிகள் உடலை நனைத்தன. பயமும் எரிச்சலும் ஒரு சேரக் கலந்து ஒரு வழியாக குழி தோண்டி முடித்தாகிவிட்டது. உடலைக் குழியில் கிடத்தி தன் வாளையும் அக்குழியினுள் போட்டு மண்ணை மூடினான். பின்னர் மீண்டும் குடிசைக்கு வந்தான். அவன் வரும் வரை அப்பெண்மணி வாசலிலேயே உட்கார்ந்துகொண்டிருந்தார். ரவிவர்மன் வந்தவுடன் அவனை உள்ளே அழைத்துச் சென்றார்.

"எல்லாம் நல்லபடியாக முடிந்தது தானே?" என்றார் அவர்.

'ஆமாம்' என்பது போன்று தலையாட்டினான் ரவிவர்மன். பெண்மணியின் முகத்தில் நிம்மதி பிறந்தது. ரவிவர்மன் சுவற்றின் மேல் தலை சாய்த்தபடி அமர்ந்திருந்தான்.

"தாயே, எனக்கு சில சந்தேகங்கள் முளைத்திருக்கின்றன. அதற்கு பதில் கூறுவீர்களா?"

"கேள் தம்பி"

"நான் உள்ளே ஒளிந்திருந்தை எவ்வாறு கண்டுகொண்டீர்கள்?"

"நான், உணவு கேட்டுவிட்டதால் அதைக் கொட்ட வெளியில் வந்தேன். அப்பொழுது நீ ஒரு மரத்தின் பின்னால் ஒளிந்திருந்ததைக் கவனித்தேன். நீ மெல்ல மெல்ல குடிசையின் அருகே வந்தாய். காவல் புரிந்திருந்த ஒரு வீரன் உன்னைக் கண்டுகொண்டான். நீ உடனே இங்கு வந்து ஒளிந்துகொண்டாய். அதன் பின் நடந்தவை

அனைத்தும் உனக்கே தெரியுமே"

ரவிவர்மன் அவர் கூறிய அனைத்தையும் மனதினுள் ஏற்றிக்கொண்டான்.

"ஏன் என்னைக் காட்டிக்கொடுக்கவில்லை என்ற கேள்விக்கு நீங்கள் இன்னும் விடை தரவில்லையே தாயே"

"குழந்தாய்! நானே சபிக்கப்பட்ட பிறவி போல் வாழ்ந்துகொண்டிருக்கிறேன். இதில் உன்னையும் காட்டிக்கொடுத்து மேலும் பாவத்தைத் தேடிக்கொள்ள நான் விரும்பவில்லை" என்று கூறியபடி கண்களில் பெருகிய நீரைத் துடைத்தார்.

"நீங்கள் யார் தாயே? உங்களைப் பற்றி தெரிந்துகொள்ளலாமா?" என்று கேட்டான் ரவிவர்மன்.

"நான் அயோத்தியவன நாட்டைச் சேர்ந்தவள். இப்பொழுது நான் நாகவனத்தில் அடிமையாக வாழ்ந்துகொண்டிருக்கிறேன். எனது பிள்ளை காணாமல் போய்விட்டான். எனது பெண்ணோ என்னுடன் சேர்ந்து அடிமையாகிவிட்டாள்" என்று கூறியபடி மேலும் கண் கலங்கினார்.

"மன்னித்துவிடுங்கள் தாயே! உங்களின் நிலை தெரியாமல் கேட்டுவிட்டேன்"

"பரவாயில்லை தம்பி" என்று சிறிது நேரம் நிறுத்தினார் அவர். "நீ ஒற்றர் வேலை பார்க்க வந்திருக்கிறாயா?" என்று கேட்டார்.

'தான் வந்த விஷயம் இதுவென்று ஊகித்து விட்டாரே இவர்' என்று எண்ணிய ரவிவர்மன் அவர் தனக்கு செய்த உதவியை எண்ணிப்பார்த்து 'இவர் ஆபத்தானவர் அல்ல. ஆதலால் தனக்கு உதவி புரிந்த இவரிடம் உண்மையைச் சொல்வதில் தவறில்லை' என்று எண்ணியபடி, "ஆமாம் தாயே! அதற்குத்தான் வந்திருக்கிறேன்" என்றான்.

அதை அவர் ஏற்கனவே ஊகித்திருந்ததால் அதைப் பெரிதாக எடுத்துக்கொள்ளாமல் மீண்டும் அணையத் துடித்த தீபத்தை அணையாதவாறு பார்த்துக்கொண்டார்.

"தாயே, எனக்கு ஒரு உதவி செய்வீர்களா?" என்று கேட்டான் ரவிவர்மன்.

கல்லை செதுக்கினேன் உன் உருவம்
கண்ணால் செதுக்கினேன் நம் காதல்
இதயம் சலவை கல்லாய் அடிவாங்குகிறது ...!!!
கே இனியவன்

"என்னால் முடிந்த உதவியைச் செய்கிறேன் குழந்தாய்" என்றார் அவர்.

"உங்கள் பெயர் என்ன?"

சிறிது தயக்கத்துடன் "ஆண்டாள்" என்ற அவர் "இதுவா நீ கேட்ட உதவி?" என்றார் நகைப்பின் ஊடே.

## வற்றிப் போகும் வாத்தியார்

இமாம்தீன்

வாத்தியார் என்கிறோமே - இவர்
வசதிகாரர் இல்லை
ஒரு வைத்திய நிபுணர்
விண்வெளிக்கான வழிகாட்டி
பல நூற்று வகிபாகி ....

தலைகாக்கும் இரத்த வழங்கி
இவர் சேமித்த அறிவை
பிறர் கணக்கில் வைப்பிலிடும்
'மாணவ' வங்கி
மானசீகத் தாங்கி.

மாற்றான் பிள்ளைக்கு
அறிவினைக் கொடுக்க
செலவழித்த காலங்களில் -இவர்
'நினைத்திருந்தால்'
மாடாமாளிகைகளை
கட்டி மாட்சிமையோடு வாழ்ந்திருக்கலாம்

வெண்கட்டிப் பொடிகள்
எத்தனை முறை
இவர் இதயத்தை அடைத்திருக்கும்
'என்றாலும்'
தன்னுடல் பொடியாகும் வரை
கல்வியினை செவ்வனே கொடுக்க
போராடும் மனிதர் இவர்.

உயிரற்ற மெழுகுவர்த்திக்கு ஏன் இவரை
ஒப்பிட வேண்டும்.
உயிரை உருக்கி அறிவைப் பெருக்கி
ஒளி தரும்
இம்மனிதர்க்கு யாரும் ஈடில்லை.
குரல்வளை கிழியக் கத்திக் கத்தியே
கழிந்து போகிறது இம்மாமனிதர் வாழ்வு.

மூளைகளைச் சுத்தப்படுத்தி
நாளைய பிரஜைகளை உருவாக்கும்
மூலிகை இவர்.
கருவெல்லாம் இனி குருக்களை
கூப்பியே உருவாகட்டும்
சிசுக்கள் பிறக்கையில்
'அம்மா' என்பதற்கு அடுத்தபடியாக
'ஆசான்' என அழைத்துக்
கொண்டே பிறக்கட்டும்.

தன்னிலையில் உயர்வு இல்லை
இவர் மூலம் தனக்கு மேல்
எத்தனை எத்தனை அறிவாளிகள்
அங்கும் இங்கும்

மூளைக்கு விருந்தளிக்கும் இவர்
மூலையில் முடங்கிக் கிடந்தால்
மடியும் வரை மடியிலில்லை யாரும்
மாய்ந்த பிறகே
வாயிலை நாடும் சிலர் மட்டும்.

"இல்லை தாயே! என்னை உங்களால் அரண்மனைக்குள் அழைத்துச்செல்ல முடியுமா?"

ஆண்டாள் சிறிது யோசித்தார்.

"என்ன தாயே யோசிக்கிறீர்கள்?"

"ஒன்றுமில்லை குழந்தாய். காலையில் அயோத்திய வனத்தை சேர்ந்தவர்கள் அரண்மனை தோட்டத்திற்கு வேலைக்கு செல்வார்கள். அவர்களுடன் கலந்து நீ செல்லலாம். ஆபத்து நேராமல் பார்த்துக்கொள். இப்பொழுது நீ கண்ணுறங்கு" என்று கூறியபடி எழுந்து சென்றார்.

ரவிவர்மன், 'இது வரை நமக்கு பாதகமில்லாமல் எல்லாம் நடக்கிறது' என்ற நிம்மதியினில் தன் மனதினை நுழைந்து சிறிது மன சாந்தியோடு உறங்கிப்போனான்.

⋆ ⋆ ⋆

வீரபுர அரண்மனை நிசப்தத்திலும் இருளிலும் மூழ்கியிருந்தது. அரண்மனை முகப்பிலும் மதில் சுவரின் மேலேயும் ஏற்றப்பட்டிருந்த தீப்பந்தத்தின் ஒளியில் சில வீரர்கள் அரண்மனைக்கு காவல்புரிந்துகொண்டிருந்தனர். வீதிகளிலும் காவல் வீரர்கள் பரபரப்போடு வலம் வந்து தங்கள் பணியைச் செவ்வனவே செய்துகொண்டிருந்தனர்

அரண்மனையே அமைதியாக இருந்த நேரத்தில் மணியம்மையின் உள்ளம் மட்டும் அமைதியாக இல்லை. எதையோ நினைத்து வெந்துகொண்டிருந்தார் அவர். சாளரத்தின் வழியே பால் நிலா வெண்ணிற கதிர்களை பொழிந்தபடி இருந்ததையும் அவர் கவனிக்கவில்லை; விரும்பவுமில்லை.

படுக்கையின் அருகிலிருந்த மேஜையில் தட்டு நிறைய பழங்களும் அதை அறுத்துச் சாப்பிட கத்தியும் வைக்கப்பட்டிருந்தது. அதைச் சிறிது நேரம் அனல் ததும்பிய விழிகளோடு உற்றுநோக்கிய மணியம்மை கத்தியை எடுத்துக்கொண்டு அவ்வறையை விட்டு வெளியே வந்தார்.

நீண்ட கூடத்தினுள் நடந்து போன அவரை தூணின் பின்னால் மறைந்திருந்த ஓர் உருவம் மெல்ல எட்டிப் பார்த்தது. அவர் கையிலிருந்த கத்தியையும் நோக்கியது. தன்னை யாராவது கவனிக்கிறார்களா? என்று ஓரிருமுறை சுற்றும் முற்றும் நோக்கியபடி சென்ற மணியம்மையின் கண்களை சுவற்றில் மாட்டப்பட்டிருந்த ஒரு சித்திரம் கவர்ந்தது. சித்திரத்தை உற்றுநோக்கினார்.

அரசரின் தாயாருடைய சித்திரம் அது. ஓர் ஆசனத்தில் அவர் அடக்கமாய் உட்கார்ந்திருப்பதைப் போன்று வரையப்பட்டிருந்த அச்சித்திரத்தை ஏளனத்தோடு பார்த்துவிட்டு நேராக அரசர் இருக்கும் அறையை நோக்கி நடந்த மணியம்மையை தூணின் பின்னால் மறைந்திருந்த இன்னோர் உருவம் வேவு பார்த்தது. அது வெறும் யாரும் அல்ல; ராஜகுருவே தான். விஷமப் புன்னகையோடு மணியம்மை என்ன செய்கிறார் என்று மறைந்திருந்து கவனித்துக்கொண்டிருந்தார் ராஜகுரு.

மணியம்மை, மன்னரின் அறையின் அருகே சென்று அதைத் திறக்க கதவினில் கைவைத்தபோது ஒரு சலசலப்பு மணியம்மையையும் ராஜகுருவையும் திடுக்கிடச் செய்தது. சலசலப்பு வந்த இடத்தை நோக்கி மணியம்மை ஓடினார். சித்திரம் மாட்டப்பட்டிருந்த சுவற்றை கலவர விழிகளோடு நோக்கிவிட்டு தன் அறையை நோக்கி ஓடி கதவினைத் தாழிட்டுக்கொண்டார்.

அந்த சித்திரத்தில் என்ன இருக்கிறதென்று குழப்பத்தோடு அங்கே சென்று பார்த்த ராஜகுரு அதிர்ச்சிக்குள்ளானார். அந்த சித்திரம் காணாமல் போயிருந்தது.

*தொடரும்...*

## பரிணாமம்

**மருதூரான்**

குத்தகைக்கு நிலமெடுத்து
முத்துசம்பா விதவிதச்சி
குருத்தரும்பி வருகையில
குளிர்ந்திருச்சி என் மனசு

⋆⋆⋆

குளத்தோரம் நீ நடக்க
குனிஞ்சி நானும் களை பிடுங்க
உச்சிமண்ட காயயில
பச்சத்தண்ணி தாறபுள்ள

⋆⋆⋆

வச்ச கறிக்குழம்பும்
வறுத்த கருவாடும்
வந்து நீ பரிமாறையில
வாழ்க்கை முடிஞ்சாலும்
வாய்க்கு ருசி போகாது

⋆⋆⋆

கோடையில ஓடை கட்டி
மாரியில மதகு வெட்டி
வெள்ளாமை வெட்டயில
வெட்டி போட்டான் பல உசிர

⋆⋆⋆

மூவிரண்டு மாசத்துல
மொத்தமா தாரனெண்டு
வட்டிக்கு வாங்கினது
வயலோட போயிரிச்சி

⋆⋆⋆

வெளஞ்ச நெல்லு வேர் பிடிக்க
நாவரண்டு நான் தவிக்க
நட்டாற்றில் விட்ட நிலை
என்கதையாய் ஆயிரிச்சி

⋆⋆⋆

அர்த்தசாமத்தில அயர்ந்த
நேரத்தில
விரட்டிச் சொன்னாங்க
விடியுமுன்ன எல்லாரும்
விட்டெழும்போனும் எண்டு

⋆⋆⋆

மூட்டமுடிச்செல்லாம்
முண்டிக்கிட்டு வண்டிகட்டி
மூடின வீட்ட மட்டும்
முடியாமல் விட்டுவிட்டு
மூச்சிறைக்க வெளிக்கிட்டு
முகாமுக்கு வந்துசேர்ந்தோம்
அகதியானோம்...!

⋆⋆⋆

# உயிர் மூன்றெழுத்து கவிதை மூன்று வரி

கே இனியவன்



என் இதயத்தில் குடியிருப்பவளே
மெதுவாக மூச்சு விடுகிறேன் -என்
மூச்சுகாற்று சுட்டுவிடகூடாது

***

கல்லை செதுக்கினேன் உன் உருவம்
கண்ணால் செதுக்கினேன் நம் காதல்
இதயம் சலவை கல்லாய் அடிவாங்குகிறது ...!!!

***

காதலித்து பார் உள்ளம் சுத்தமாகும்
கவிதை எழுது உலகம் சுத்தமாகும்
இரண்டையும் செய்பவன் ஞானி

***

உலக போதையிலேயே கொடூரம்
உன் போதை கண் தான் -இன்னும்
போதையில் இருந்து மீளவில்லை

***

நெற்றி கண் திறந்தபோது நக்கீரன் எரிந்தார்
நீ கண் திறந்த போது நான் எரிந்தேன்
முதலாவதில் மீட்சி இருந்தது உன்னில் ...?

***

நீ வேறு நான் வேறு இல்லை
வாழ்க்கை வேறு காதல் வேறுமில்லை
உன் நினைவு வேறு உணர்வு வேறுமில்லை

***

நான் ஒருதலை காதலாக இருந்திருந்தால்
வலியை உனக்கு தந்திருக்க மாட்டேன்
இருதலையாக உனக்கும் வலியை தருகிறேன்

***

உன்னை மறக்கும் இதயம் வேண்டும்
என்னை மறக்கும் இதயம் வேண்டும்
மரத்துப்போகும் வாழ்க்கை வேண்டும்

***

பெண்ணை புரிந்து கொள்ளவது இன்பம்
புரிந்து கொள்ளாமல் இருப்பது அதைவிட இன்பம்
காதல் இவை இரண்டுக்கும் நடுவில் ஒரு யுத்தம்

***

சின்ன சின்ன சண்டை போட்டு ஒத்திகை
பார்த்தவளே - சொல்லியிருந்தால் நானும்
பயிற்ற பட்டிருப்பேன் வழியில் இருந்து தப்ப, ,,!!!

***

நீ வானவில் போல் அழகாகவும் இருக்கிறாய்
அழிந்து போகும் கலை பொருளாகவும் இருக்கிறாய்
பாவம் என் இதயம் வளைந்து போகிறது...!!!

***

நான் காதல் புறா உன்னை சுற்றி சுற்றி வருகிறேன்
நீ காதல் கழுகு கொத்தி கொத்தி கலைக்கிறாய்
நம் காதல் செத்து செத்து பிழைக்கிறது, ,,,!!!

***

# குறளின் குரல்

அறத்துப்பால் - இல்லறவியல். அதிகாரம் - 05. இல்வாழ்க்கை

சுந்தர் புருஷோத்தமன்




*41: இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.*

இல்வாழ்வா னென்போன் நல்லாளோடியைந்து
நல்லறம் பேணுபவன் - அவன் கடனோ
பெற்றார்க்குந் தான்பெற்ற பிள்ளைக்கு முற்றார்க்கும்
நற்றுணையாய் நிற்பதுவே யாம்.

*42: துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை.*

பற்றிலா துறவிக்குந் துணையாவான் – பசிநிறைந்து
வாடும் வறியோர்க்குந் துணையாவான் – திக்கற்று
திரிந்திவனைச் சேர்ந்துபின் னிறந்தார்க்குந் துணையாவான்
மனையாளோ டுடன்வாழ்ந்து இல்லறம் பேணுபவன்.

*43: தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.*

தென்புலந்திகழ்கின்ற முன்னோர்; வீடுநல்குந் தெய்வம்;
விருந்தினர்க்கூட்டம், கூடிவாழுஞ் சுற்றமொடு தானுமாய்
ஐவர்க்குஞ் செய்யும் அறநெறி போற்றுதல்
இல்வாழ்வு கொள்வானின் சீர்.

*44: பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்.*

பழிக்கஞ்சி நந்வழி நாடுவான் நாடி
தேடின பொருளதை உற்றார்க்குப் பகுத்துண்ணும்
பண்புடை வாழ்வினன் பரம்பரைப் பாழாகா - வாழுமது
நிலந்தனில் வளங்கொண்டு நலங்கண்டே.

*45: அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.*

மனைவிக்கு மக்கட்கு மன்பு நல்கி
மற்றோர்க் குதவு மறம் படைத்து
வாழ்கின்ற வாழ் வதுவே – இல்வாழ்வை
சூழும் பண்பும் பயனுமாகும்.

*46: அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவது எவன்.*

அறவழி தன்னிலில் வாழ்வது வாற்றுவார்
பெறற்கரும் பயன்தனைப் பெறுவராம் – அஃதன்றி
பிறவழி தன்னிலில் வாழ்வது வாற்றிடின்
பயனொன்று மில்லையாம் கொள்.

*47: இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை.*

இல்வாழ் வதன்கண் அறநெறியில் நின்றோன் - பிறவழியில்
பொல்லாப் பிறப்புய்ய மெனக்கெடும் பிறர்க்கெல்லாம்
திறத்தாலே மேம்பட்டுத் திகழ்வானாம் – அவனே
அத்தன்மைக் கொண்டார்க்குந் தலை.

*48: ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து.*

தானு மறந்தனில் வழுவாது நின்று
மற்றோர்க்கும் மறமில்லா நந்நெறியூட்டி
வாழும் வகையோனின் இல்வாழ் வதுவே
தவஞ்செய்வார் வாழ்வுக்கும் மேல்.

*49: அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று.*

இல்வாழ்வும் துறவாழ்வும் நல்வாழ்வா மதிலே
அறமெனப்பட்டது இல்வாழ்வாம் – துறவாழ்வும்
பிறர் பழிப்பிற் கிடமின்றி இருத்தலின் அஃதும்
நல்லற மெனப் பட்டது.

*50: வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.*

வாழும் வாழ்வதை இல்லாளோ டறநெறியில்
வாழ்வாங்கு வாழும் இல்வாழ்வா னவனும்
வானில் வாழும் வானோருள் ஒருவனாய்
வாழும்போதே வழுத்தத் தக்கவன்.

- தொடரும்

# சிநேகிதியுடன் தனிமையில் சில நிமிடங்கள்

15 - அமானுஷ்ய சக்தியும் மனதின் சக்தியும்

பூங்கோதை

வணக்கம் நட்பு நெஞ்சங்களே…

*பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்*

*பற்றுக பற்று விடற்கு - திருக்குறள்*

பற்றில்லாதவனாகிய கடவுளுடைய பற்றை மட்டும் பற்றிக் கொள்ள வேண்டும், உள்ள பற்றுக்களை விட்டொழிப்பதற்கே அப் பற்றைப் பற்ற வேண்டும்.

என்ற திருவள்ளுவரின் களவியல் சிந்தனையோடு சிநேகிதிக்குள் பயணிக்கலாம் வாங்க.

அன்புள்ள சிநேகிதிக்கு

என்னுடைய பெயர் ஹரி நான் ஒரு நல்ல பொறியியல் கல்லுரியில் 3-ம் ஆண்டு படித்து கொண்டிருக்கிறேன். எனக்கு அமானுசிய சக்திகளை பற்றி ஆராய்வதில் ஆர்வம் அதிகம். கடவுள், பேய் உள்ளதா இல்லையா? இதை பற்றி தங்களுக்கு தெரிந்த உண்மை பற்றி கூறுங்கள். இல்லை நான் என்னுடைய காலத்தை விரயமக்கி கொண்டிருக்கிறேனா?

வணக்கம் நண்பா…

முதலில் உங்களுக்கு நான் எழுதிக்கொண்டிருக்கும் 'மதங்களின் பிடியில்..' என்ற பதிவை அறிமுகம் செய்கிறேன். இது முழுக்க முழுக்க உங்கள் கேள்விக்கான பதில் இல்லாவிட்டாலும், கடவுள், பேய் என்பவற்றில் எனக்கு நம்பிக்கை இருக்கிறதா என்பது பற்றி உங்கள் கேள்விக்கான பதிலுக்கு சிறு விளக்கமேனும் கொடுக்கும் என நம்புகிறேன்.

நண்பா, இயற்கையில் எமக்கு மீறிய சக்திகள் இருக்கின்றன என்பதில் எனக்கு ஓரளவு நம்பிக்கை இருக்கின்றது. ஆனாலும் மற்றவர்கள் அதை பார்ப்பது போல் பூதாகாரமாக அதை நான் பார்ப்பதில்லை. அமானுஷ்யம் என்று ஒன்று இருந்தால் அது சுவாரஷ்யமானதாகத்தான் இருக்கும் என்ற எதிர்பார்ப்பைப் பல எழுத்தாளர்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். திகிலூட்டும் மர்மங்களும், பரபரப்பும், எதிர்பார்ப்புகளும், எப்படியோ எமக்குள் குடியேறிவிட்ட சில அனுபவங்களும் கூட அமானுஷ்யத்தை சுவாரஷ்யமானதாக ஏற்படுத்தியிருக்கிறது என்று நினைக்கிறேன்.

என்னுடைய பார்வையில் கடவுள், பேய் என்பன பற்றி நான் அறியும் பல கதைகள் அல்லது சம்பவங்கள் பெரும்பாலும் யாரோ ஒருவருடைய அல்லது ஒரு குழுவினருடைய மனத்தோற்றங்களே என்று நம்புகிறேன். சிறு குழந்தையாக இருக்கும் போது எனக்கு நிறைய பேய் பிசாசு பயம் இருந்தது. ஆனால், மனோதத்துவ மருத்துவர் டாக்டர் கோபூர் எழுதிய 'மனக்கோலங்கள்' என்ற நூலை என்னுடைய 8 வது வயதில் படித்த போது அந்த நம்பிக்கைகளில் 50% தகர்ந்து போனது. (அந்த நூலைப் படித்து நீண்ட காலம் ஆகிவிட்டதால் பல விடயங்களை மறந்துவிட்டேன். அந்த நூல் இப்பொழுது எங்கேனும் கிடைக்கும் என்றால் அதை வாங்கவேண்டும் என்றா ஆவல் உண்டு. உங்களில் யாருக்கேனும் கிடைக்குமானால் எனக்கும் தெரியப்படுத்துங்கள்…)

நண்பா, அமானுஷ்யம் என்பது எத்தனை சுவாரஷ்யமானதாக இருந்தாலும், அது நமக்கு வாழ்வில் பயன்படுமா என்று சிந்தித்துப் பார்த்தால் பெரும்பாலும் இல்லை என்றே தோன்றுகிறது. எனவே அது பற்றி ஆராய்வது நேர விரயம் தான் என்பதே என் அபிப்பிராயம்.

நண்பா, அமானுஷ்ய சக்திகளை விட மனத்தின் சக்தி மிகப்பெரியது. அதை நீங்கள் ஆராய்வதும் அடைவதும் மிகப்பெரும் பலனை அடைய முடியும். இதை எங்கே போய் ஆராய்வது என்று யோசிக்கிறீர்களா? நண்பா, நீங்கள் எங்கேயும் தேடி அலையத் தேவை இல்லை. அது உங்களுக்குள்ளேயே இருக்கிறது. அதைவெளியில் கொண்டு வருவது எப்படி என்பதற்கான வழிமுறைகளையே நீங்கள் தேடி அறிய வேண்டும். உங்கள் மனத்தை ஆராயுங்கள், அதையே அமைதிப்படுத்துங்கள், ஆற்றுப்படுத்துங்கள், கட்டுப்படுத்துங்கள்… இங்கே நீங்கள் அமானுஷ்யத்தில் எதிர்பார்ப்பதை விட அதிக சக்தியை அடைந்து கொள்ள முடியும்.

மனத்தின் சக்தி பற்றி இணையத்தளங்களில் தேடிப்பாருங்கள். ஏராளமாகக் கொட்டிக் கிடக்கின்றன. நீங்கள் அடைவது உங்கள் வாழ்க்கைக்கு பயனுள்ளதாக அமையும். இதற்கு மனத்தைக் கட்டுப்படுத்தும் பயிற்சிகளும் தியானப்பயிற்சிகளும் மிகவும் உதவும்.

மனதின் சக்தியைக் கொண்டு சாதனை நாட்டிய பலர் உலக வரலாற்றில் இருக்கிறார்கள். அவர்களைபற்றி சில விடயங்களைத் தருகிறேன்.

நமது இந்தியாவைச் சேர்ந்த யோகி ஸ்வாமி ராமா என்பவர் தன் மனோ சக்தியால் தன் உடலில் மாற்றங்களை ஏற்படுத்த வல்லவராக இருந்தார். மெனிங்கர் ஃபௌன்டேஷன் என்ற அமெரிக்க மனவள ஆய்வு நிறுவனம் அவரை 1070 ல் 3 நாட்கள் பரிசோதனை செய்த போது ஒரே நேரத்தில தன் வலது கையிலும் இடது கையிலும் 11 டிகிரி(F) வித்தியாசத்தில் இருக்கச் செய்து காட்டினாராம்.

அதே மெனிங்கர் ஃபௌன்டேஷன் ஹொலண்டைச் சேர்ந்த ஜேக் ஷ்வார்ஸ் என்பவரையும் ஆராய்ச்சி செய்தது. அவருடைய கையில் பெரும் ஊசி ஒன்றால் குத்தியும் இரத்தம் கசியாததைக் கண்டார்கள். பின்னர் அவரை இரத்தத்தைக் கசிய விடும்படி சொன்ன போது அடுத்த கணம் இரத்தம் பெருகத் தொடங்கியது. பின்னர் மீண்டும் அதை நிறுத்தும்படி ஆராய்ச்சியாளர்கள் சொன்னார்கள். உடனே அவர் இரத்தம் பெருகுவதை நிறுத்திக் காட்டினார். இதுபோலவே சிகரெட்களால் கையில் சுட்ட போது எரிகாயம் ஏற்பட்டதே தவிர உடலில் எந்த மாற்றமும் ஏற்படவில்லை. எந்த காயமோ அல்லது தழும்போ 24

முதல் 48 மணிநேரங்களுக்குள் அவரது உடலில் இருந்து மறைந்தது. அவருடைய தோல் பல வருடங்களாக எந்த ஒரு வடுவும் இல்லாமல் குழந்தையில் தோல் போல இருந்ததாக ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

அறுவைச்சிகிச்சையின் போது தற்பொழுது பாவிக்கப்படும் மயக்க மருந்துகள் (அனெஸ்தீஸியா) கண்டுபிடிக்கப் படும் முன்னர் ஸ்கொட்லாண்டைச் சேர்ந்த டாக்டர் ஜேம்ஸ் எஸ்டெய்ல் (Dr. James Esdale) நோயாளிக்கு எந்த வலியும் தெரியாதபடி இயற்கைக் கோமா நிலைக்குக் கொண்டு சென்று சுமார் 400 அறுவைச்சிகிச்சைகளை செய்திருக்கிறாராம்.

விஞ்ஞானத்தில் மிகப்பெரும் வளர்ச்சியடைந்திருந்த வல்லரசு நாடான அமெரிக்காவின் சீஐஏ உளவுத்துறை நிறுவனம் கூட மனத்தின் சக்தியைப் பயன்படுத்தியதாக வரலாறு சொல்கிறது. விண்வெளிக்கலங்கள் போன்ற வசதி இல்லாத காலத்தில் ரஷ்யாவுடனான பனிப்போர்க் காலத்தில் ஒரு அபூர்வ சக்தி கொண்ட மனிதரின் உதவியுடன் ரஷ்யாவின் அணுஆயுத உற்பத்திக்கிடங்கை வரைந்ததாம். பனிப்போர் முடிவடைந்தபின் அந்த அணுவாயுத உற்பத்திக் கிடங்கை நேரில் படம் எடுத்துப் பார்த்த போது அதிகாரிகள் திகைத்துப் போனார்களாம். பாதுகாப்புக் காரணம் கருதி அதை வரைந்த நபரின் பெயரை அவர்கள் வெளியிடவில்லை.

உன் நினைவுகளின்
வலியினால் -என்
இதயமும் கல் ஆனது
இப்போது புரிகிறது இறைவன்
ஏன் கல்லாக இருக்கிறான் என்று...

பிரியமானவன்

இது போலவே அமெரிக்க ஜனாதிபதி ஜிம்மிக் காட்டரின் காலத்தில் ஒரு அமெரிக்க விமானம் ஆபிரிக்கப்பகுதியில் காணாமல் போயிற்று. ஆமெரிக்காவின் விண்வெளிக்கலங்களால் அதனைக் கண்டு பிடிக்க முடியவில்லையாம். அபொழுது அமெரிக்காவின் உளவுத்துறை அமைச்சர் ஸ்டான்ஸ் பீல்ட்டர்னர் ஒரு அபூர்வ சக்தி கொண்ட பெண்மணி மூலம் அந்த விமானம் இருக்கும் இடத்தை அறிந்து கொண்டு அந்த இடத்தைக் கமிராக்கள் மூலம் மையப்படுத்தி கூர்ந்து நோக்கிய போது விமானம் விபத்துக்குள்ளாகி இருந்தது கண்டு பிடிக்கப் பட்டதாம். இன்று இத்தகைய மனத்தின் சக்தி கொண்ட ஒருவர் இருந்திருந்தால் தொலைந்து போன மலேசியா விமானம் எப்பொழுதோ கண்டுபிடிக்கப் பட்டிருக்கும்...

இப்படி பல சாதனையாளர்கள் மந்த்தின் சக்தியைப் பயன்படுத்தி உலகை அதிசயிக்க வைத்திருக்கிறார்கள். மந்த்தின் சக்தியை பயன்படுத்துவதன் மூலம் நமக்கும் உலகுக்கும் நன்மை செய்யமுடியும் என்பதற்கு இவர்கள் சாட்சிகளாக இருக்கின்றனர்.

பெரும்பாலும் கடவுளை அடைய வேண்டி செய்யப்படும் தியானங்களில் மனது ஒருநிலைப்படுத்தப்படுவதால் மனத்தின் சக்தி அதிகரிக்கிறது. ஆனால் அந்த சக்தி



தூங்கடா தம்பி தூங்கு
நீ விழித்தால் பசி என்று
சொல்வாய் அதை கேட்கும்
கொடுமையை விட நீ
தூக்கமாய் இருகிறாய்
என்ற நிம்மதியில்
இருப்பேன்
தூங்கடா தம்பி தூங்கு ...!!!

அண்ணா நீ பேசும்
இதய ஓசை எனக்கு
கேட்கிறது
உனக்காகவே நான்
தூங்குவது போல்
நடிக்கிறேன்
எழுதிருக்க மாட்டேன்
நிம்மதியாய் இரு .....!!!

கே இனியவன்

ஆனால் இவற்றில் நாட்டம் செலுத்த ஆரம்பிப்பவர்களால் கடவுளை அடைய முடியாது. அந்த சக்திக்குள்ளேயே கட்டுப்பட்டுப் போய்விடுவார்கள்.

இதற்கு என் சிநேகிதன் ஒரு அழகான உதாரணம் சொன்னான். ஒரு பிள்ளை தன் தாயிடம் தூக்கி அணைக்கும்படி கேட்டு அழுகிறது. அந்தப் பிள்ளையின் தாயோ வீட்டுவேலையில் மும்முரமாக இருக்கிறாள். அதனால் அழுகின்ற பிள்ளைக்கு தற்காலிகமாக ஒரு விளையாட்டுப் பொம்மையைக் கொடுக்கிறாள். குழந்தை அழுகையை நிறுத்திவிட்டு அந்த பொம்மையோடு விளையாட ஆரம்பிக்கிறது. அந்த பொம்மைக்குள் கட்டுப்பட்டுத் தாயை தற்காலிகமாக மறந்துவிடுகிறது.

இந்த உதாரணக் கதை போலவே. கடவுளை நெருங்கும் போது ஏற்படும் மனத்தின் சக்தியைக் கண்ட மனிதன் கடவுளை அடையும் நோக்கத்தில் இருந்து வழுவி, மனசக்தியின் அற்புதங்களில் நாட்டம் கொண்டு அதிலேயே மூழ்கிவிடுகிறான். எனவே கடவுளை அடையும் நோக்கில் செய்யப்படும் ஆன்மீகச் செயல்களால் மனத்தின் சக்தி அதிகரித்தால் அப்பொழுது ஏற்படக்கூடிய அற்புதங்களில் நாட்டம் கொள்ளாமல் நிராகரித்து விட வேண்டும்.

## கண்ணீர்...

பத்மா சுந்தர்

*அழுகை ஒவ்வொன்றிற்கும்*
*அர்த்தங்கள் புதுப்பிக்க வேண்டும்,*
*அழகானதாய் அர்த்தப்படும்*
*வாழ்க்கையின் அதீதம்...!*

*கண்ணீருக்குள் கதைகள்*
*கண்ணீருக்கான கதைகள்,*
*கண்ணீர்த் துளிகளும் சுடுகிறது*
*இதயங்களின் விளிம்புகளின் வேதனைகளால்...!*

*கசிந்து கசிந்து உருகியதோ -*
*மனம் கண்ணீராய் வெளிப்படுகிறதே..!*
*வெந்து வெந்து வெதும்பியதோ -*
*மனம் வெந்நீராய் கண்ணீர்த்துளிகள் - என்*
*கண்களில்...!!!*

எனவே நண்பா, அமானுஷ்ய சக்தியில் ஆர்வம் கொள்வதை விட உங்களுக்கும் சமூகத்துக்கும் பயன்படக்கூடிய மனத்தின் சக்தியில் நீங்கள் ஆர்வம் கொண்டால் அது நல்லது என்று நினைக்கிறேன்.

மற்றப்படி, அமானுஷ்யம் பற்றி ஆராயும் ஆர்வம் உங்களுக்கு உண்மையிலேயே அதிகமாக இருந்தால், அதை ஒரு பொழுது போக்காக எப்போதாவது கிடைக்கும் ஓய்வு நேரங்களில் மட்டும் மேற்கொண்டால் நலமே. மற்றும்படி இதற்கென்று நேரம் செலவழித்து, நீங்கள் தொழில் துறையிலோ அல்லது உங்கள் வளர்ச்சியிலோ செலவழிக்க வேண்டிய பெறுமதியான நேரத்தை வீணாகக் கரைத்துவிட மாட்டீர்கள் என்றே நம்புகிறேன்.

அமானுஷ்யம் என்ற ஒன்று இருந்தாலும் அதுபாட்டுக்கு இருந்துவிட்டுப் போகிறது என்று இருந்து விடுங்கள்.

ஒரு நல்ல பொறியியலாளராக உருவாக என் வாழ்த்துக்கள்.

மிக்க நன்றி அன்பு சிநேகித உள்ளங்களே....

தயை செய்து தங்கள் கருத்துளை யார் மனதையும் புண்படுத்தாதபடி போடுங்கள் அத்துடன் உங்கள் கேள்விகளை பின்னூட்டத்தில் போடாமல் poongothaichelvan8@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு எழுதி அனுப்புங்கள்.

மீண்டும் சந்திக்கலாம்.

## பெண்களே வாழ்வின் உயிரோட்டம்

கிரிகாசன்

காற்றும் காற்றுடை வாசம் கனிகளின் கூட்டம்
கனவெனும் மனவுணர்வும்
ஊற்றும் குளிர்தரு மோடை உறைபனிக் கூட்டம்
இயற்கை யென்றாக்கியவள்
மாற்றம் மனதுகொள் வேட்கை மலர்வினில் நாட்டம்
மகிழ்வெழ இன்பமிட்டும்
தோற்றும் துயரெழும் தாக்கம் துடித்திடும் இதயம்
துவளென உணர்வளித்தாள்

நாற்றம் மதுமலர் தேக்கம் நனையிதழ் ஊட்டம்
நாடிடும் வண்டினமும்
போற்று மெழில்சுனை ஆட்டம் புதிதெழும் காற்றும்
புரள் அலையோட்டமென
சாற்றும் மொழிதரும் பாட்டும் முழவொலி கேட்டும்
மனமெழும் தீரமுடன்
நேற்றும் இன்றுடன் நாளை நிகழ்வது யாவும்
நிலைகொள வழிசமைத்தாள்

சீற்றம் இடியொளி மின்னல் சொரிமழை வானம்
சிதறிடும் மர இலைகள்
ஆற்றும் செயலிவை யாவும் அவனியில் சேரும்
இயற்கையின் கடமைகளே
ஏற்கும் உடைகளும் உண்ணும் உணவுடன் இனிமை
உறவுகள் அவள்தரவே
கூற்றன் கொடிதெனும் பாசக் கயிறிட கொள்ளும்
கணம்வரை உயிரளித்தாள்

ஏற்றம் எழவிழும் தாக்கம் இழிமையின் துச்சம்
இவைதரும் உணர்வழிய
மேற்கும் மறைகதிர் போக்கும் மதியின் பொன்கீற்றும்
மகிழ்வுள்ளம் ஆக்கிவிட்டு
நூற்கும் நூலிழை சேர்க்கும் நாற்குணப் பெண்மை
நினைவுகள் இனிமை யென்றாள்
போற்றும் செயலதும் புகழும் இயற்கையின்
புலமை கவிஞரின் வழக்கமன்றோ

பெண்ணும் பெண்ணவள் பேச்சும் பேச்சினில் மாற்றம்
பெரிதெழ ஆக்கியவள்
மண்ணும் மண்விழை பொன்னும் பொன்முடி அரசும்
படையுடன் போரெனவும்
எண்ணும் மனதினில் இன்பம் இளமை யின் எண்ணம்
இவைகளில் சாம்ராஜ்ஜம்
திண்ணம் விழநிலை கொள்ளும் திறனுடை பெண்ணும்
தேர்ந்திட அழகீந்தாள்

முன்னும் கண்விழி அம்பும் மெய்யிடை போரும்
மூளென தீயிடுவாள்
என்னும் வலிமையும் கொண்டால் இகமதில் இன்னும்
எழும் வலி இவள் கொண்டால்
தன்னும் தன்நிலை- பேணுந் தன்மையில் ஆளும்
தகமையைக் கொள்வளெனில்
மின்னும் தாரகையல்லள் மேதினி கொள்ளும்
இன்னொரு சுடராவாள்

# பெண்ணொருத்தி புலம்புகிறாள்

கனகீஸ்வரி



*போட்ட மஞ்ச காஞ்சிருச்சு*
*வெச்ச பூவும் வாடிருச்சு*
*விரல் நகமா என நினைச்சு*
*வெட்டி போட்டு போனதென்ன?*

☆

*காத்தோடும் கடலோடும்*
*கற்பனையில் நான் பேசி*
*கட்டி வச்ச என் கோட்ட*
*காலடியில் சரிஞ்சதென்ன?*

☆

*உள்ளத்தை திரியாக்கி*
*உணர்வால நெய் ஊத்தி*
*உனக்காக தீபம் வச்சேன்*
*ஊதியே நீ அணைச்சதென்ன?*

☆

*அழகான பின்னலிட்டு*
*ஆசைப்படி சேலைகட்டி*
*அன்போடு காத்திருந்தேன்*
*அத்து விட்டு போனதென்ன?*

☆

*உப்புக் கண்ணீர*
*உனக்காக நான் வடிக்க*
*தப்புக் கதை சொல்லி*
*தட்டி விட்டு போறதென்ன?*

☆

*நீ ஒத்த சொல் பேசிடத்தான்*
*நடுநிசியும் முழிச்சிருக்கேன்*
*சித்தமெல்லாம் உறஞ்சி இப்போ*
*வெத்துடல நான் கிடக்கேன்..*

☆

*பாய் விரிச்சு படுப்பதில்ல*
*பந்த பாசம் ஏதுமில்ல*
*நொந்து போன என் மனச*
*புரிஞ்சு நீயும் சேரவில்ல*

☆

*புத்தி சொல்லி கேட்டிடல*
*புதுசா நான் பேசிடல*
*கசப்பான மருந்தானேன்*
*கண் உறுத்தும் துரும்பானேன்....*

*காசு பணமெல்லாம் உன்*
*கால் தூசு பெற்றிடுமா?*
*உன் அன்பு சொல் போல*
*தேன் கூட இனிச்சிடுமா?*

☆

*நிழலா நீ இருந்தா*
*நித்திரையும் இன்பமடா*
*அனலா நீ எரிஞ்சா*
*ஆயுசுக்கும் துன்பமடா.....*

☆

*நா வரண்டு அழுதாலும்*
*நாதியில்ல கேட்டிடத்தான்....*
*நீயும் விட்டு போனபின்ன*
*யாரிருக்க வாழ்ந்திடத்தான்......*

☆

*காலம் எல்லாம் உன்னோட*
*கற்பனையில் சேந்திருப்பேன்*
*கட்டையில நான் படுத்தா*
*உன் காலடிய சுத்திடுவேன்.....*

☆

*நித்தம் நித்தம் போராட்டம்*
*நினைவுகளே உயிரோட்டம்*
*சுத்தம் உள்ள உன் மனச*
*சுமந்த படி வாழ்வோட்டம்.....*

☆

*அத்தனையும் தாங்கிவிடு*
*குத்தம் குறை சொல்லாத*
*கூறுகெட்ட என் மனச*
*குத்தி நீயும் போகாத.....*

☆

*உன் அன்பான மொகம்பாக்க*
*ஆயுசுக்கும் காத்திருப்பேன்*
*உன் ஆசை மொழிகேட்க*
*அனுதினமும் பேசிடுவேன்.....*

# தமிழீழம்.....தமிழீழம்.....

ஜோஷி




தமிழீழம்
நாங்கள் விலைக்கு
வாங்கிய பூமியில்லை
எங்கள் சகோதர சகோதரிகளின்
குருதியினை விலையாக கொடுத்து

அடைந்த புண்ணிய பூமியடா.......!
குனிந்தே இருந்த
தமிழனை நிமிர்ந்து
நடக்கச் செய்த பூமியடா!!

பழம்பெருமை பேசி பேசி
வீணாய் சென்ற வாழ்வினில்
வீரத்தின் மதிப்பினையும்
தியாகத்தினையும்
காணச் செய்த பூமியடா........

ஜாதி மத மோதல்களில்லாது
தமிழராய் தமிழராக
வாழச் செய்த பூமியடா.....
தூய தமிழ் மொழியினையும்
வளரச் செய்து
தமிழரின் பண்பினையும்
காத்திட பூமியடா!!!!

யாசகம் கேட்போரில்லாது
வரதட்சனை சாவுகளில்லாது
வீரத்தில் விளைந்த
புண்ணிய பூமியடா!!!!

உலகமே எதிர்த்தாலும்
தமிழர் வாழ ஒரு

சிறந்த கட்டமைப்பினை
பசியினால் மரணமில்லாத
வாழ்வு கொடுத்த பூமியடா!!

காமத்தை வளர்க்காது
தூய காதலை வளர்த்த
புண்ணிய பூமியடா........

தமிழ் தமிழென்று
மேடைப் பேச்சினில் மட்டுமல்ல
இலக்கியத்திலும் வாழ்வியலிலும்
சமூகத்திலும் தமிழினை
வளர்க்கச் செய்த பூமியடா......

பணத்திற்காய் அல்லாது
இனத்திற்காய்
உயிரையும் கொடுத்து
தமிழினத்தினை காத்திடும்
புலிகள் கொண்ட பூமியடா...

மரணமே என்றாலும்
தமிழினத்திற்காய்
புன்னகையுடன் ஏற்றிடும்
மாவீரர்கள் கொண்ட பூமியடா...

உலகிலுள்ள ஒவ்வொரு
தமிழரும் வாழ
நினைத்திடும் ஒரு
புண்ணிய பூமியடா...

இன்றுமென்றும்
தமிழரினை தூய
மொழிப் பற்றுடனும்
இனப் பற்றுடனும்
காதல் உணர்வுடனும்
தூய கலாச்சாரத்துடனும்
தூய தோழமையுடனும்
வாழ வளர வைக்க
களம் காண
துடித்திடும் பூமியடா
எங்கள் தமிழீழம்!!!
புண்ணிய பூமியடா!!!

# பொம்முவும் அமிர்தப் பானையும்

லோகேஷ் ஜெயகோபி

அத்தியாயம்-4. பொம்முவின் அதிர்ச்சி

பொம்மு மெல்ல நகர்ந்து யார் கண்ணிலும் படாமல் வகுப்பில் நுழைந்து அன்பரசுவின் மேஜைக்கு அடியில் சென்றாள். அன்பரசுவும் அவன் நண்பர்களும் துண்டுக் காகிதங்களை முன்னும் பின்னும் மாற்றி பகிர்ந்து பரிட்சையை ஏமாற்றி எழுதுவதை கண்டாள் பொம்மு.

காகிதங்களை மேஜைக்கு அடியில் மாற்றப் படுவதை கண்ட பொம்மு, அன்பரசுக்கு வரும் எல்லா காகிதங்களையும் அவள் கிழே வாங்கி ஆசிரியரின் மேல் தூக்கி போட்டாள்.

ஆசிரியர் உடனே திரும்பி அன்பரசுவை கையும் களவுமாக பிடித்தார்.

“என்னடா இது?...இதுக்கு தான் படிக்க வரியா?” – ஆசிரியர் கோபமாக.

“சார்...நான் இல்லை சார்...இவன் தான் அத கொண்டு வந்தான் சார்.” என்று அன்பரசு தனக்கு முன் அமர்திருப்பவனை மாட்டிவிட்டான்.

“சார் எனக்கும் எதுவும் தெரியாது சார்...இவன் தான் அத கொண்டு வந்தான்” என்று அவன் வேறொருவனை காட்ட இப்படியாக அன்பரசுவுடன் அவன் நண்பர்கள் அனைவரும் மாட்டிக்கொண்டனர்.

அரவிந்த் பொம்முவை மேஜைக்கு அடியில் கண்டான். பொம்மு சிரித்துக் கொண்டிருந்தான். அரவிந்தும் மெல்ல சிரித்தான். ஆனால் அதை அன்பரசு பார்த்துவிட அரவிந்தை அவன் கோபமாக அரவிந்தை முறைக்க ஆரம்பித்தான்.

“உங்கள சும்மா விடக்குடாது. வாங்க முதல ஹெச்.எம் ரூம்க்கு போயிட்டு எக்ஸாம் எழுதலாம்.” என்று ஆசிரியர் அன்ப்ரசுவையும் அவன் நண்பர்களையும் வெளியே அழைத்து சென்றார். அன்பரசு அரவிந்தை முறைத்துக் கொண்டே அங்கிருந்து சென்றான்.

நிச்சயம் அன்பரசு இதற்காக எதோ செய்ய போகிறான் என்று அரவிந்துக்கு தெரியும். பொம்மு யாருக்கும் தெரியாமல் அந்த தேர்வு அறையை விட்டு வெளியே சென்றாள்.

தேர்வு முடிந்தது. எல்லா மாணவர்களும் வீடு திரும்பிக் கொண்டிருந்தனர். அரவிந்த் தன் பள்ளிப் பேருந்தை நோக்கி சென்றுக் கொண்டிருந்தான். எப்போதும் போல அவன் பையில் பொம்மு அமைதியாக இருந்தது.

அரவிந்த் தலையில் யாரோ தட்ட உடனே அவன் திரும்பினான். அன்பரசுவின் நண்பர்கள் இருவர் அரவிந்தை பிடித்தனர்.



“ஹே ...அன்பரசு உன்ன கூட்டிட்டு வர சொன்னான். வா “என்று அவர்கள் அரவிந்தை மிரட்டினர்.

## காதல் தவிப்பு

அனுரிதா

கருவேலங்காட்டுக்குள்ள கத பேச வாடி புள்ள
ஏன் மனச அள்ளி போன அழகான நெறத்து முல்ல
மனச வருடி போன
ஏன் உசுர உருகி போன
தனியா தவிச்சு நின்னேன்
ஏன் தாகம் தணியவில்ல (2)

நீ காட்டுல வெளயும் வாச சந்தன கட்ட
நான் தீயில எப்பயும் எரியும் வேகுற வெறகு கட்ட
உன்ன நம்பி வந்தேன்
நீ என்ன வெம்ப விட்ட
கண்ணுல தெரியுங் காட்சி
ஒன் கனவுக்கேன்ன சாட்சி? (2)

கருவேலங்காட்டுக்குள்ள கத பேச வாடி புள்ள
ஏன் மனச அள்ளி போன அழகான நெறத்து முல்ல
மனச வருடி போன
ஏன் உசுர உருகி போன
தனியா தவிச்சு நின்னேன்
ஏன் தாகம் தணியவில்ல (2)

புன்னகையால் மனச பிசையும் பூ போன்ற பெண்ணே
ஏன் உசுர அடிச்சு தொவைக்குதடி இரண்டே இரண்டு கண்ணே
ஒன்ன நானும் மதிச்சேன்
நீ தீயா என்ன எரிச்ச
நான் வெந்து வெந்து துடிச்சேன்
நீ தண்ணீ தர மறுத்த(2)

கருவேளங்காட்டுக்குள்ள கத பேச வாடி புள்ள
ஏன் மனச அள்ளி போன அழகான நெறத்து முல்ல
மனச வருடி போன
ஏன் உசுர உருகி போன
தனியா தவிச்சு நின்னேன்
ஏன் தாகம் தணியவில்ல (2)

“இல்ல நான் போகணும் . இன்னும் கொஞ்ச நேரத்துல ஸ்கூல் பஸ் கிளம்பிடும்!” என்று அவர்களிடம் இருந்து நழுவ பார்த்தான் அரவிந்த்.

“ஒரு நாள் நடந்து போனா ஒன்னும் ஆவாது…கிளம்பு” என்று அவர்கள் அரவிந்தை இழுத்து செல்ல ஆரம்பித்தனர். அரவிந்த் பள்ளியின் மறைவான இடத்துக்கு கொண்டு வரப்பட்டான். அங்கே ஒரு மரத்தடியில் நின்றிருந்த அன்பரசுவும் அவன் நண்பர்களும் ஆக்ரோஷமா அவனை கண்டனர்.

“ஹே…என்ன நக்கலா? திமிரா சிரிச்ச? இப்ப சிரிடா..” என்று அன்பரசு அரவிந்தின் சட்டையை பிடித்தான்.

“இல்லடா…நான் உன்ன பாத்து சிரிக்கல!” என்று பதறினான் அரவிந்த்.

“தனியா சிரிக்க நீ லூசாடா? சொல்லுடா” என்று அன்பரசு அவன் சட்டையை உள்ளுகினான்.

“இல்ல….சாரி.. இனிமே அப்படி பண்ணமாட்டேன். “ என்று நடுங்கியபடி அரவிந்த் கூறினான்.

“உன் சாரி எனக்கு ஒன்னும் தேவ இல்ல! உன்ன வாயில மட்டும் ரத்தம் வரமாதிரி அடிக்கிறேன்! சரியா?” என்று அன்பரசு தன் கையை உயர்த்தினான்.

திடிரென அரவிந்த் பின்னே நின்றிருந்த சிறுவன் அவிந்தின் பையிலிருந்து பொம்முவை எடுத்தான்.

“இங்க பாரேன்! பொம்மை!” என்று அந்த சிறுவன் அன்பரசுவிடம் தூக்கி போட்டான். அரவிந்த் பொம்மு அசைவில்லாமல் பொம்மையை போலவே நடிப்பதை கண்டான்.

“இந்த பொம்மை ரொம்ப கேவலமா இருக்குதே! இதை சரிபண்ணி தரட்டுமா?”என்று அன்பரசு பொம்முவின் கைகளை உடைக்க கைகளை வளைத்தான்.

“வேண்டாம்! அத ஒன்னும் பண்ணிடாத!” என்று அரவிந்த் பதறினான்.

“இந்த கேவலமான பொம்மைய உடைச்சு குடுத்துடறேன்! அப்புறமா இத வச்சு அழுதுக்கோ!” என்று அன்பரசு வெறித்தனத்துடன் பொம்முவின் கழுத்தை உடைக்க முயன்றான்.

சர்ர்! என்று பொம்மு அன்பரசுவின் கையிலிருந்து தாவி தரையில் நின்றது. அனர்சுவும் அவன் நண்பர்களும் சற்று திகைத்து நின்றனர். அரவிந்த் பொம்மு அவர்களை. கோபமாக முறைப்பதை கண்டான்.

“என்னடா? இது ரோபோவா?” என்று பயந்தபடி அன்பரசு கேட்டான்.

“யார பாத்து கேவலமா இருக்குனு சொல்ற? “ என்று பொம்மு அன்பரசுவை முறைத்தபடி கையை உயர்த்தியது. பொம்மு கையிலிருந்து ஒரு பிரகாசமான ஒளி வெளியேறி அன்பரசுவை தாக்கியது. அன்பரசு பறந்து போய் அவன் நண்பர்கள் மேலே விழுந்தான். அரவிந்த் அதிர்ந்தான். பொம்முவும் அதிர்ச்சியில் தன் கைகளை கண்டது.

“ஆஆ! இது பேய் பொம்ம! ஓடுங்கடா!” என்று கத்திக்கொண்டு அன்பரசுவும் அவன் நண்பர்களும் ஓட ஆரம்பித்தனர்.

அரவிந்த் பொம்மு செய்த மாயாஜாலத்தை கண்டு அதிர்ச்சியுடன் பார்க்க பொம்மு தன்னால் எப்படி மாயாஜாலத்தை செய்ய முடிந்தது என்று பெரும் குழப்பத்துடன் அரவிந்தை பார்த்தது..

(தொடரும்)

## என் தேவதை

ஜோவியல்பாலா

இதோ வந்துவிட்டாள் எனது
குழந்தையைப் பெற்றெடுக்கும்
என் வாழ்க்கைத் துணைவி,

தாய்மை ஒரு பெண்ணை இவ்வளவு
அழகானவளாக மாற்றுமா
வியக்கிறேன் நான்!

இன்றோ நாளையோ பிள்ளை
பெற்றுக்கொள்ளப் போகும்
நிலையில் அவள் முகம்
"கற்பகிரகத்தில் வீற்றிருக்கும்
அம்மன்" போல் உள்ளது.

தளிர் நடையும்,
வெளித் தள்ளிய வயிறுமாக
சாந்தமான முகத்தோடு
வீற்றிருக்கிறாள் என் தேவதை
எனது கைவிரல்களைப் பற்றிக்கொண்டு!

# தூக்கணாங்குருவியின் கனா

துருவன்

5 பைசா மிட்டாயை சப்பி திண்ணா சந்தோஷம்;
சட்டை ஓரத்தில் மடித்து காக்கா கடிகடித்து நண்பனுக்கு கொடுக்க ரொம்ப சந்தோஷம்

ராசக்கா கண்மாயில ஆடை மறந்து குளிக்க சந்தோஷம்;
அப்ப மீன்குஞ்சு அடிவயித்த கடிச்சா ரொம்ப சந்தோஷம்

மாரியம்மன் பொட்டலில கபடி விளையாட சந்தோஷம்;
5 ரூபாய் பந்தயம் கட்டி ஜெயிச்சா ரொம்ப சந்தோஷம்

மாடு மேய்க்க மாவடுவோட கஞ்சிகட்டி கொண்டுபோன சந்தோஷம்;
பக்கத்து தூக்குச்சட்டியில கருவாட்டு வாசம் வந்தா ரொம்ப சந்தோஷம்

பக்கத்துவீட்டு தோட்டத்துல பூப்பூத்தா சந்தோஷம்;
அதைப்பறிச்சு அத்தைபொண்ணு அருந்ததிக்கு கொடுக்க அவ சிரிச்சா ரொம்ப சந்தோஷம்

தினமும் கோழி பிடிக்க ஓட்டுமேல ஏற சந்தோஷம்;
அதே கோழி மறுநாள் கொழம்புல கொதிச்சா ரொம்ப சந்தோஷம்

பல்லிமுட்டையை பாம்பு முட்டைன்னு சொல்லிபயமுறுத்த சந்தோஷம்;
அதைபார்த்து பயந்து ஓட்டமூக்கு சோலையம்மா அழுதா ரொம்ப சந்தோஷம்

வண்டிகட்டிபோய் பக்கத்தூர் சந்தைல அப்பன் சொக்கா எடுத்துதந்தா சந்தோஷம்;
அதை கொடியில மாட்டிவச்சி அழகுபார்க்க ரொம்ப சந்தோஷம்

அப்பனோட சண்டைபோட்டு தம்பிய பள்ளிக்கூடம் அனுப்ப சந்தோஷம்;
பைமூட்டைய தோளில் போட்டுக்கிட்டு அவனை இடுப்பில் தூக்கிட்டு பள்ளிகூட வாசல் விடுறது ரொம்ப சந்தோஷம்

அருந்ததி வயதுவந்த சேதிகேட்டு பாதிசோத்துல எந்திரிக்க சந்தோஷம்;
குச்சிகட்டும் வேளையில கீத்து ஓலையில அவ வெட்கத்துல நான் சிவக்க ரொம்ப சந்தோஷம்

வைகாசி மாசத்துல மழையில நனைய சந்தோஷம் ;
என் அப்பன் வாய்க்கால் முதல்ல நிறைஞ்சா ரொம்ப சந்தோஷம்

என் ஆத்தா போட்டோ முன்னாடி படுத்துதூங்க சந்தோஷம்;
ஆத்தாவே வந்து தாலாட்டு பாடுனா ரொம்ப சந்தோஷம்

நிலாவைக்காட்டி தம்பிக்கு சோறுட்ட சந்தோஷம்;
அந்த வேளையில அவன் தந்த முத்தம் ரொம்ப சந்தோஷம்

டூரிங்க் டாக்கிஸ்ல தலைவர் படம் பார்க்க சந்தோஷம்;
இடைவேளைல இஞ்சிமரப்பாக்கு காலணா இருந்தா ரொம்ப சந்தோஷம்

கூட்டாஞ்சோறு ஆக்கயில அருந்ததிய லேசா இடிக்கையில சந்தோஷம்;
மாடு மேய்க்கையில தினமும் படுக்கையில அருந்ததிய நினைக்க ரொம்ப சந்தோஷம்

பெரியாத்தாக்கிட்ட பேய் கதை கேட்டு பயந்து தூங்க சந்தோஷம்;
அந்த கதைய தம்பிகிட்டச் சொல்லி பயமுறுத்த சந்தோஷம்

யாருமில்லா வேளையில அருந்ததிக்கு முத்தம் வைக்க சந்தோஷம்;
சத்தம் போடாம சந்ததிய சம்மதிச்சா ரொம்ப சந்தோஷம்

பட்டுபுடவை கட்டி அருந்ததி மனமேடையில இருந்தா சந்தோஷம்;
மணமகனா பக்கத்துல நான் இருந்தா ரொம்ப சந்தோஷம்

இது எதுவுமே நடக்கலைனா சந்தோஷம் ;
நான் இந்த பூமியில பொறக்கலேன்னா ரொம்ப சந்தோஷம்

## உலகத்தை அழிக்கவில்லையா …?

கே இனியவன்

உலகம் அழியப்போகிறது
இந்த ஆண்டு அழியப்போகிறது
அடுத்த ஆண்டு அழியப்போகிறது
இன்னும் பத்து ஆண்டில்
அழியப்போகிறது ….
என்றெல்லாம் அலட்டும்
உலகமே - இப்போ மட்டும்
உலகம் அழியவில்லையா…?

சுயநல அரசியல் வாதிகள் …
பேராசை தொழிலதிபர் …
போலி சமய வாதிகள் …
அரைகுறை அறிவள்ளோர் …
என்பதால் அந்த நாடு
அழிந்து கொண்டு
வரவில்லையா …?

உலக வல்லாதிக்கம் ….
உலகமயப்படுத்தல் ……
உலக பயங்கரவாதம் ….
உலக அரச பழிவாங்கல் …
உலகத்தை அழிக்கவில்லையா …?

# உள்ளிருந்து ஒரு குரல்

*ராஜாரமணி*

காலில் அடிபட்டிருந்ததால் என்னால் நகர முடியவில்லை. நான்கு நாட்கள் ஆகியும் வலி இன்னும் விட்டப்பாடில்லை. அன்று மட்டும் நான் கொஞ்சம் கவனமாக இருந்திருந்தால் இன்று இந்த நிலைமைக்கு ஆளாகியிருக்க மாட்டேன். ஆனால் என்ன செய்வது...?

இனி என்னால் முன்பு போல் வேகமாக ஓட முடியுமா..? ஓட வேண்டாம். நடக்கவேணும் முடியுமா..? சந்தேகமே. நினைத்தாலே அழுகை வருகிறது. ஆனால் ஆறுதல் கூறவோ, கண்ணீர் துடைக்கவோ யாருமில்லை. அதனால் அழுகையை அடக்கி கொள்ள வேண்டியதுதான். இதோ என் அருகில் அமர்ந்திருக்கும் இவன் மட்டும் அன்று இல்லை என்றால் ரத்தம் கசிந்தே நான் உயிர்விட்டிருப்பேன். இவனுக்கு நான் மிகவும் நன்றிக்கடன்பட்டுள்ளேன்.

மிகவும் துயரமான அந்த நாள் நான் நன்றாக சாப்பிட்டிருந்தேன். உடல் பெருத்து விடும் என்பதால் சமீபகாலமாக உணவைக் குறைத்துக் கொண்டேன். ஆனால் சம்பவத்தினத்தன்று மதியம் வீட்டில் நல்ல சமையல். ருசியும் தூக்கலாக இருந்ததால் அளவுக்கதிகமாகவே உண்டு விட்டேன். சாப்பிட்ட உணவு செரிக்க வேண்டும் என்பதற்காக வீட்டு வராந்தாவில் நடந்தபடி இருந்தேன்.

மற்ற எல்லோரும் உண்ட களைப்பில் மதிய உறக்கத்திற்கு சென்று விட்டனர். மெதுவாக நடந்தபடி இருந்த என்மீது வராந்தாவை ஒட்டியிருந்த மல்லிகை செடியில் இருந்து திடீரென பூக்கள் உதிர்ந்தன. தோட்டச் செடிகளை தொட்டு வந்த தென்றல் என் உடல் உரசிச் சென்றது. "என்ன இது" என்ற வியப்பு மேலிட திரும்பி வாசல் பக்கம் பார்த்தேன்.

வாசலில் ஒரு கார் நின்று கொண்டிருக்க அதன் ஜன்னல்களுக்கு வெளியே மஞ்சள் நிற மேனியுடைய அவளைப் பார்த்தேன். உடம்பில் புது ரத்தம் பாய்ச்சியதை போன்றதொரு உணர்வு. உண்ட உணவு செரித்து விட்டதை போன்றதொரு உணர்வு. இதயம் நடனமாடத் தொடங்கியது. மகிழ்ச்சியின் உச்சத்தில் இங்கே நான் மதி மயங்கிக் கிடந்த வேளையில் கார் மெதுவாக நகரத் தொடங்கியது. கல்லாய் நின்றிருந்த நான் திடீரென உயிர் பெற்றேன்.

அந்த காரைப் பின்தொடர்ந்து அவளின் இருப்பிடம் அறிந்து கொள்ள முயன்றேன். அவளைப் பார்த்த பொழுது செரித்து விட்டதை போன்ற உணவு ஓடும் பொழுது என் வேகத்தை தடை செய்தது. அந்த காரைப் பின்தொடர்ந்தப்படியே வீட்டில் இருந்து மிக அதிக தொலைவு வந்துவிட்டேன். அதைக் கூட ரோட்டைக் கவனிக்காமல் கடக்க முயன்ற போது ஒரு வண்டி என்னை மோதித் தள்ளிய பின்பே உணர்ந்தேன். கீழே விழுந்ததும் தெரிந்துக் கொண்டேன். அடிபட்டு நான் கிடப்பது மெரீனா பீச் அருகே என்று. ப்ரணிக்காவுடன் அடிக்கடி அங்கே சென்றிருக்கிறேன்.

ப்ரணிக்கா என்னிடம் வந்து "நாம மெரீனா பீச் போகப் போறோம்" என்றதுமே என்னிடம் உற்சாகம் தொற்றிக் கொள்ளும். ஜாலியாக கிளம்பி விடுவேன். காரணம் என் வயதுடைய பெண்கள் நிறைய பேர் அங்கே வருவார்கள்.

சிலர் என்னை பார்த்து புன்னகை செய்வார்கள். அழகாய் இருந்தால் நானும் காது வரை சிரித்து வைப்பேன். இல்லையென்றால் முகத்தை திருப்பிக் கொள்வேன். இது போன்ற காரணங்களால் மெரீனா பீச்சை அடையாளம் காண்பது சுலபமாக இருந்தது. ஆனால் மெரீனா வந்தால் என்னிடம் என்றும் இருக்கும் உற்சாகம் அன்று இல்லை. காரணம் அடிபட்டதால் காலில் வடிந்து கொண்டிருந்த ரத்தம்.

## அரசி(யாள்)யல்

*வைஷ்ணவ தேவி*

*நாட்டின் அரசி நான்*
*அவலநிலை எனக்கே...*
*ஆளுமை என்னுடன் இருந்தும்*
*ஆளும் வர்க்கமே ஆளுகிறதே...*

*உன்னத நிலை இருந்தும்*
*ஒட்டையாய் சட்டங்கள்...*
*உச்சியில் ஆளுபவர்களால்*
*ஊசலாடும் ஏழைமக்கள்..*

*ஊடகங்களும் பிறமும்*
*ஊக்குவித்து உவகைகொள்ளும்*
*எகினன் படைத்த பிறவிகள்*
*ஏகபிழை செய்கிறார்கள்*

*என் கீழ்நிலை சிதைந்து*
*கீர்த்தி பெறுவது எப்போது....*
*ஏக்கமுடன் காத்திருக்கிறேன்*
*காக்க வருவார்கள் என்பிள்ளைகள்...*

*எழுதி வைத்த காகிதத்தை*
*கரையான்கள் அழிக்கும் முன்னே*
*தூய்மையான உள்ளம் கொண்டு*
*தூக்கிவிட வாருங்களேன்...*

வலி தாளாமல் நான் கத்தினேன். ரோட்டில் சென்று கொண்டிருந்த நிறைய வண்டிகள் சற்று நின்று வேடிக்கை மட்டும் பார்த்து விட்டு சென்றன. ஆனால் ஒருவரும் வந்து எனக்கு உதவவில்லை. என் உயிரைக் காப்பது அவ்வளவு முக்கியம் அல்ல என்று எல்லோரும் நினைத்து விட்டார்கள் போல. அப்பொழுதுதான் என் அருகில் அமர்ந்திருக்கும் இவன் வந்தான். காலில் வடிந்துக் கொண்டிருந்த என் ரத்தத்தை நிறுத்த ஒரு அழுக்கு துணிக் கொண்டு மூடினான். பிறகு அலேக்காக என்னை தூக்கினான்.

"அடடே.. பரவலையே.. என்னையே தூக்கி விட்டானே" என்று நான் எண்ணிய போது வலி என்னை சுய நினைவுக்கு

கூட்டி வந்தது. என்னை மருத்துவமனைக்கு தூக்கிச் சென்று காயத்திற்கு மருந்து தடவி கட்டு போட்ட பின் இந்த வீட்டிற்கு அழைத்து வந்தான்.

இதை வீடு என்று சொல்ல முடியாத அளவிற்கு மிகவும்

## ஜாதிகள் இல்லையடிப் பாப்பா...

தமிழரசி

ஜாதிகள் இல்லையடிப் பாப்பா... பின்பு
ஜாதி சான்றிதழ் எதற்க்கடி பாப்பா..???

அரசாங்க தேர்வு ஏழுத முடியல பாப்பா...
ஜாதி சான்றிதழ் இருந்தால் முன்னுரிமை
பாப்பா..??

பெரியாரின் விதி செய்வோம் பாப்பா...?
அது காதல் திருமணமாய் இருந்தாலும் பாப்பா..?
கண்டிப்பா ஜாதிக் கேட்டு காதலிக்கணும் பாப்பா..?

மணம் இனைத்தாலும்
பிரிப்பாங்க பாப்பா???
அப்படிப் பட்ட மாணம் கெட்ட மனித மிருகம்
இருக்காங்க பாப்பா..??

காதல்னு சொன்னாலும்
நம்பாத பாப்பா..?
கடைசியில கைவிரிச்சி
நிப்பாங்க பாப்பா..?
நம்மல கண்கலங்க வைப்பாங்க பாப்பா..?

ஜாதிகள் இல்லையடி பாப்பா..?என்று
பொய்ச் சொல்லி தான் பாடம்
நடத்துறாங்க பாப்பா..?

இனியாவது யோசிப்போம் பாப்பா.?
நம்ம மனிதனா இல்லை ஜாதி மிருகமானு
இனிவொரு விதி செய்வோம் பாப்பா..?

அழுக்காக வைத்திருந்தான். இன்னும் வைத்திருக்கிறான். கடந்த நான்கு நாட்களாக நான் அவனிடம் "உன் உதவிக்கு மிக்க நன்றி. ஆனால் என் வீட்டிற்கு என்னைக் கொண்டு போய் விட்டுவிடு.. இருக்கும் இடத்தைச் சொல்கிறேன்" என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்து விட்டேன்.

நான் பேசும் போது என்னை திரும்பி பார்க்கிறானே தவிர அதைப் புரிந்து கொண்டதாக காட்டிக் கொள்ளவேயில்லை. எனக்கு கோபமாக வந்தது. ஆனால் என்ன செய்ய.. என்னால் தான் நடக்க முடியவில்லையே.. என்னால் நடக்க முடியாத வரை இங்கிருந்து அவனுடைய உதவியில்லாமல் செல்வது சாத்தியமேயில்லை. பொறுத்திருக்க வேண்டியதுதான். ஆனால் தினமும் இரண்டு வேலை மட்டுமே சாப்பிடக் கொடுக்கிறான். அதுவும் பிரட், பிஸ்கட், பழைய சாதம் மட்டுமே. காலையில் உணவு கொடுத்துவிட்டு சென்றுவிடுவான். சாப்பாடு இரவு தான்...பசி கொல்லும்..

ஆனால் எதுவும் செய்ய இயலாமல் அவன் வரும் வரை அறையில் சுருண்டு கிடப்பேன்.

இன்று எங்கும் செல்லாமல் அறையிலேயே கிடக்கிறான். மீண்டும் பேசிப்பார்ப்போமா என்று ஒரு ஒரு யோசனை தோன்றியது. ஆனால் நன் பேசுவதைப் புரிந்துக் கொள்ளாமல் கோபம் கொண்டு விட்டால் என்ன செய்வது என்று தோன்றியதால் அமைதியாக இருக்கிறேன்.

ஏதோ பேப்பர் படித்துக் கொண்டிருந்தவன் திடீரென எதற்கு என்னை உற்றுப் பார்க்கிறான்.. என்ன மீண்டும் பேப்பரைப் பார்க்கிறான். சிரிக்க வேறு செய்கிறான். அப்படி என்ன பேப்பரில் இருக்கிறது.

மெதுவாக அருகில் போய் எட்டிப் பார்ப்போம்.

ஆ.. என் படம். ப்ரணிகா முகம் பார்க்கும் கண்ணாடியில் அடிக்கடி நான் பார்த்த என் முகம். காரில் செல்லும் போது ஜன்னல் கண்ணாடியில் நான் பார்த்து ரசித்த என் முகம். மழை ஓய்ந்த பின்பு தேங்கி நிற்கும் தண்ணீரில் குளிர்ச்சியோடு நான் பார்த்து நின்ற என் முகம். ஆனால் எப்படி இந்த பேப்பரில்.? ச்சே.. அதில் என்ன இருக்கிறது என்று படிக்க முடியவில்லையே. இவனாவது வாசித்து காட்டுவானா என்று பார்ப்போம்.

என்ன இவன். என்னைப் பார்த்து சிரித்துக் கொண்டே இருக்கிறான்?.

அடிச்சதுடா அதிர்ஷ்டம்

அதிர்ஷ்டமா.. என்ன அதிர்ஷ்டம். எதற்க்காக இதைச் சொல்கிறான். என் படம் இருக்கும் பகுதியை மட்டும் ஏன் கிழிக்கிறான்.

என்ன திடீரென எங்கயோ கிளம்புகிறான் போல. "ஏய்..ஏய்.." எதற்காக என்னை வெளியே அழைத்து வந்தான்.. ஓ.. வீட்டை பூட்டுவதற்கா..?? ஆனால் இதெல்லாம் எதற்க்காக...? ஒன்றும் புரியவில்லையே ..

"டேய்.. என்னை வெளியே அழைத்து வந்துவிட்டு நீ எங்கே தனியே ஓடுகிறாய்.." - - - ----------- ஓ.. வழக்கம் போல நான் பேசியது புரியவில்லையா ..? ம்ம்.. அவன் வரும் வரை காத்திருக்க வேண்டியது தான்.

இதோ வந்துவிட்டானே.. ஓ .. ஆட்டோ அழைத்து வர சென்றாயா...? அதை சொல்லிவிட்டு செல்ல வேண்டியது தானே..? "ஏய்.. என்னை எதற்கு ஆட்டோவில் ஏற்றுகிறாய்..." - - -

பார்ப்போம். என்னை எங்கே அழைத்து செல்கிறான் என்று.- - - -

"டேய்.. எங்க சார் போகணும்னு வண்டி ஓட்டுபவன் கேட்குறான் பார்.."------------ இதோ... அவன் கிழித்து வைத்திருந்த என் படம் போட்ட பேப்பர். அதில் என்ன இருக்கிறது..?

இந்த அட்ரசுக்கு போகணும்

அட்ரசா..? அப்படி என்றால் என்ன..? நான் இது வரை கேட்டதில்லையே.. ஆ.. தலை சுற்றுகிறது.. சற்று நேரம் அவன் மடியில் தலை வைத்து தூங்குவோம்.

ம்.. அதற்குள் எழுப்பி விட்டானே.. ரொம்ப நேரம் தூங்கிவிட்டோமோ...? இல்லை.. இல்லை.. கனவு கூட வரவில்லையே. கொஞ்ச நேரம் தான். எந்த இடம் இது..?

## மழையின் வருகைக்காக

காயத்ரி கேசவன்



*வானில் மேகத்தின் கண்ணீராய் வருகிறாய் நீ..*

*பூமியில் பயிர்களுக்கு உயிர் தரும் தண்ணீர் ஆகிறாய் நீ..*

*என் முகத்தில் பன்னீராய் விழுகிறாய் நீ..*

*விண் தூவும் மழைத்துளியே..*

*என் மனம் மகிழ வைக்கும் உளி நீயே..*

*நீ என்ன மற்றவரை மயக்கும் மாய வலையா..?*

*உன்னில் நனைகையில் என் குழந்தைத்தனம் துளிர்விடுகிறதே ..!*

*சாரலாய் வந்தென்னை சாய்த்தாய்..*

*தூரலாய் வந்தென்னை துள்ள செய்தாய்..*

*மேகத்திற்குள் ஒளிந்து இருக்கும் மழையே..*

*நீ பொழிவது எப்பொழுது..?*

*நான் நனைவது எப்பொழுது..?*

*என்றும் உன் இனிய வருகைக்காக.....!!!*

ஆ.. ப்ரனிக்காவின் வீடு. நான் ஓடி விளையாடிய வீடு. ருசியான சாப்பாட்டை எனக்கு மூன்று வேளையும் கொடுத்த வீடு. என் உயிர் காப்பற்றியவானே... உனக்கு மிக்க நன்றி.. என்னை இங்கு கொண்டு வந்து சேர்த்ததற்கு.. நல்ல வேளை..

சார்..

"இன்னும் சத்தமாக கூப்பிடு... அப்பொழுதுதான் எல்லோரும் வெளியே வருவார்கள்.. "

அட.. நான் பேசுவது தான் ப்ரனிக்காவிற்கு புரியுமே.. "ப்ரனிக்கா.. இதோ நான் வந்துவிட்டேன் பார்.. வெளியே ஓடி வா.."

எங்கே.. யாரையும் காணோம். அதோ என் ப்ரனிக்கா ஓடி வருகிறாள். அவளுடன் ப்ரனிக்காவின் அப்பாவும், அம்மாவும் கூட வருகிறார்களே.. இதோ வந்து விட்டாள்.. இதோ இதோ.. - - - "ஏய் ஏய்.. ப்ரனிக்கா பார்த்து.. என் காலில் அடிபட்டிருக்கிறது.." அது சரி.. அவள் எதையும் கேட்கும் நிலையில் இல்லை போல... ஆஹா.. நான்கு நாட்கள் இந்த முத்தம் இல்லாமல் எத்தனை கொடுமையாக இருந்தது..

ரொம்ப நன்றி சார்.. 4 நாளா எங்க டாமி இல்லாம ரொம்ப கஷ்டபட்டுடோம்.. நல்ல வேளை எங்ககிட்ட கொண்டு வந்து சேர்த்துட்டிங்க.. உங்க பேரு சார்..?

என் பேரு சரவணன் சார்.. 4 நாளைக்கு முன்னாடி பீச்சுக்கு போயிருந்தேன்.. அப்போதான் உங்க நாய் அடிபட்டு ரோட்ல கிடந்தது.. நான் தான் ஹாஸ்பிட்டல் தூக்கி போய் காயத்துக்கு கட்டு போட்டு என் வீட்ல வச்சிருந்தேன்..

"ஹலோ சரவணன்.. என் பேரு டாமி.. மறுபடியும் நாய்னு சொன்ன கடிச்சி வச்சிடுவேன்.."

ச்சே.. இவனுக்கு மட்டும் நான் பேசுவது புரியமாட்டேங்குதே.. ப்ரனிக்கா மட்டும் தான் நான் பேசுவதை சரியாக புரிந்து கொள்கிறாள்.. ஆஹா.. ப்ரனிக்காவின் அணைப்பு தான் எத்தனை சுகம்..

## தமிழ்

ஜோவியல்பாலா

இதோ என்றும்போல இன்றும் கதிரவன்
துயிலெழுந்துவிட்டான்
இனியெல்லோரும் எறும்புக்கூட்டமாக
கொத்துக் கொத்தாக அலைவார்கள்.

நானும் தான் அலைகிறேன் எனது
வாழ்வாதாரமான வேலைக்காக,
பட்டம் பெற்ற பின்பும் அப்பாவின்
காசிலமர்ந்து சாப்பிடும்
நிலைக்குள்ளானவன் நான்.

காலம் இப்படியோடிக்கொண்டிருக்க
என் மனமோ காதல் வயப்பட்டுவிட்டது,
ஆம் நானும் காதலில் விழுந்துவிட்டேன்,

கவிதைகளேனும் எழுதிப் பிழைத்துக்
கொள்வோமென
காதல் வயப்பட்டுவிட்டேன்

"எனது தமிழ் மொழி"யின் மேல்.
இனி தமிழ் எனக்கு சோறுபோடும்.

உங்க உதவிக்கு ரொம்ப நன்றி சார்.. டாமி காணாம போனதுல இருந்து என் பொண்ணு ப்ரனிக்கா ஒரே அழுகை.. இதோ இவதான்.. 5th படிக்குறா.. டாமி கூட்டி வந்ததுக்கு அங்கிளுக்கு தாங்க்ஸ் சொல்லு ப்ரனிக்கா.

தேங்க்ஸ் அங்கிள்..

பரவால.. ப்ரனிக்கா..

வேற டாக் வாங்கி கொடுத்தோம்.. ஆனா இவளுக்கு டாமி தான் வேணும்னு அடம் பிடிச்சா.. எனக்கு என் பொண்ணு சந்தோசம் தான் முக்கியம்.. அதான்.. பேப்பர்ல விளம்பரம் கொடுத்தேன்..

## எப்பவெல்லாம் தோன்றும்...

**யாழ்பாவாணன்**

*உடனுக்குடன்*
*எல்லாம் தெரிந்து விட*
*நம்மாளுகள் எவரும்*
*கடவுள் அல்ல!*
*வயிறு கடிக்கும் போதே*
*பசியைத் தெரிந்து கொள்கிறான்*
*பசியைப் போக்க நினைக்கையிலே*
*வருவாயீட்டத் தெரிந்து கொள்கிறான்*
*நாலுகாசு கையில் இருக்கையிலே*
*செலவு செய்யத் தெரிந்து கொள்கிறான்*
*கட்டுப்பாடு இல்லாத வேளை*
*(சுதந்திரமாக உள்ள போது தான்)*
*தவறு செய்யத் தெரிந்து கொள்கிறான்*
*தவறு செய்யும் போது தான்*
*நன்மை, தீமை எதுவென*
*நம்மாளுகள் மறந்து விடுகின்றனரே!*

*தேவை வந்த போது தான்*
*தோழமையைத் தேடுகின்றார்*
*விருப்பம் வந்த போது தான்*
*உறவைப் பேணுகின்றார்*
*துன்பம் வந்த போது தான்*
*சூழலைப் படிக்கின்றார்*
*இன்பம் வந்த போது தான்*
*சூழலையே மறக்கின்றார்*
*சூழலை விட்டு ஒதுங்கினால் தான்*
*நம்மாளுகள் தம்மையே உணருகின்றனரே!*

*சூழலே தம்மை ஒதுங்கினால் தான்*
*நம்மாளுகள் தெளிவையே பெறுகின்றனரே!*
*தெளிவைப் பெற்ற பின்னர் தானே*
*எப்பவெல்லாம் தோன்றும்*
*எல்லாவற்றையும்*
*எண்ணிப்பார்க்கத் தவறிவிட்டால்*
*எதிர்காலமே இருளாகிவிடுமென்றே*
*நம்மாளுகளும் எண்ணிப்பார்க்கின்றனரே!*

"ப்ரனிக்கா.. என் மேல உனக்கு அவ்வளவு அன்பா.. ஆஹா.. மறுபடியும் அதே முத்தம்.."

உள்ள வாங்க சார்..

பரவால சார்.. எனக்கு வேற வேலை இருக்கு.. நான் கிளம்பனும்.. விளம்பரத்துல சொல்லி இருந்தபடி அந்த பரிசுத் தொகை..

பரிசுத் தொகையா..? தொகை என்றால்..?

ஒரு நிமிஷம் சார்.. இதோ வந்துடுறேன்..

டாமி.. எங்க போன என்னை விட்டுட்டு.. ஐயோ.. காயம்.. ரொம்ப வலிக்குதா டாமி..

"வலிச்சது.. ஆனா இப்ப இல்ல.. உன்னை பார்த்ததும் வலியெல்லாம் பறந்து போச்சி ப்ரனிக்கா.. "

இந்தாங்க சார்.. அம்பதாயிரதுக்கு செக் எழுதி இருக்கேன்..

ரொம்ப நன்றி சார்.. பாய் ப்ரனிக்கா.. பாய் டாமி.. வரேன் சார்..

"பாய் சரவணன்.. உன்னோட உதவிக்கு ரொம்ப நன்றி" ச்சே.. என் நன்றியை அவனுக்கு புரியும்படி சொல்ல முடியாமல் போய்விட்டதே..

வா டாமி.. உள்ள போலாம்..

ஆ.. வேறு ஒரு டாக் வாங்கியதாக ப்ரனிக்காவின் அப்பா சொன்னாரே.. எங்கே என் எதிரி..

"டாமி.. உனக்கு புதுசா ஒரு ப்ரெண்ட் கிடைச்சிருக்காங்க.."

"அவன் என் நண்பன் அல்ல.. என் எதிரி.. என் சாப்பாட்டை பங்கு போட வந்திருப்பவன்.. என் மீது நீ காட்டும் அன்பை குறைக்க வந்திருப்பவன்.. எங்கே அவன்.. அவனை காட்டு.."

டாடி.. அந்த டாக் தூக்கிட்டு வாங்க..

இதோ தூக்கிட்டு வரேண்டா..

வரட்டும் அவன்.. எப்படியேனும் அவனை இங்கிருந்து துரத்திவிட வேண்டும்..

டாமி.. இதோ பார் உன் நியூ ப்ரெண்ட்..

ஆ.. இது கனவா இல்லை நிஜமா.. அன்று யாரைக் காரில் பார்த்து விரட்டிக் கொண்டு போய் அடிபட்டேனோ அவளைப் போலவே இருக்கிறாளே இவள்.. அதே மஞ்சள் நிற மேனி.. மயக்கும் பார்வை..

ஆஹா என்னை பார்த்து சிரிக்கிறாள்.. கடவுளே.. என்னைக் காப்பாற்றி மீண்டும் இங்கே நீ சேர்த்தது இந்த அழகியப் பெண்ணைக் காண தானா..? இனியும் நான் தனியன் அல்ல.. இதோ வந்துவிட்டாள் என்னவள்..

லொள்.. லொள்... லொள்..

## அருள்தரும் ஆயிரம் தமிழிசைப்பாடல்கள்

வேதாந்த கவியோகி நாகசுந்தரம்



**19.** நவசம்பக புஷ்பாப நாஸாதண்ட விராஜிதா

*ராகம் - மோஹனம்*

லலிதை அவளின் ரூபம் நவ

சம்பக பூவின் நாசி (ல)
வாஸனை உணரும் நாசி துர்
வாஸனை தன்னை அழிக்கும் (ல)

நல்லதை மட்டுமே நுகரும் அது
அல்லதை அறவே ஒழிக்கும்
கற்றவர் சம்பக பூவாம் அது
கொற்றவை அவளின் மூக்காம் (ல)

ஞானாநந்தம் பெற்றிடவே நல்
கானத்தில் அவளை தொழுதோம்
தீனராம் நம்மை காப்பாள் உயர்
வானோர் நிலையை அருளுவாள் (ல)

**20.** தாராகாந்தி திரஸ்காரி நாஸாபரண பாஸுரா

*ராகம் - பைரவி*

நிலவின் ஒளிக்கிங்கே ஓர் போட்டியுண்டு அது
லலிதையின் மூக்கணி அழகாகும் (நி)
அஞ்ஞான இருள் இங்கே அகன்றுவிடும்
ஞானாநந்த ஒளியிங்கே வீசிவிடும் (நி)

ஸமாதி விருத்திதான் தாரகைகள் ஸம
தமாதி ஸாதனங்கள்தான்அவள் அணிகள்
தாமாக வராது தத்துவங்கள் குரு
முகமாக வருவதே அனுபவங்கள் (நி)

திங்களின் ஒளியோ இரவல் ஒளி நம்
அம்பிகை அணியோ ஸ்வயமாகும்
ஆயிரம் நாமத்தால் போற்றிடுவோம் அந்த
தாயவள் தரணியை காத்திடட்டும் (நி)

**21.** கதம்ப மஞ்சரீ க்லுப்த கர்ண பூர மனோஹரா

*ராகம் - காம்போதி*

சிரவணம் என்னும் காது அதில்
மனனம் என்னும் கதம்பம் அம்மா உனக்கு (சி)
தரணும் உந்தன் அருளை தாயே உன்னை பணிந்தேன்
பரத்தின் சக்தி நீயே (சி)

குருவின் பாதம் அறிந்தேன் அவர்
திருவாம் உன்னை தந்தார்
சப்த ப்ரபஞ்சம் நீதான் பக்த
ஸப்த ரிஷிகள் வடிவம் (சி)

ஞானம் தரும் மகிழ்வு பர
ஞானம் வந்தால் தெளிவு
காதில் சூடும் மலர்கள் அது
வேதம் பாடும் கிளிகள் (சி)

**22.** தாடங்கயுகளீப+த தபனோடுப மண்டலா

*ராகம் - சாமா*

தாடங்கம் தரித்தனளே அன்னை
சூரிய சந்திரரை (தா)
பாட்டிதில் வந்தனளே அன்னை வழி
காட்டிட நின்றனளே (தா)

ஞானமே சூரியனாம் அந்த
ஞானமகிழ்ச்சியே சந்திரனாம்
வானத்தில் நிறைந்தனளாம் அவள்
கானத்தில் மகிழ்பவளாம் (தா)

அருள்சக்தி அவள் உருவாம் மாய
இறுக்கத்தை தொலைப்பவளாம்
குருவழி செல்பவர்க்கே அவள்
திருவருள் தருபவளாம் (தா)

**23.** பத்மராக சிலாதர்ச பரிபாவி கபோலபூ:

*ராகம் - சங்கராபரணம்*

பத்மராகமும் நாணும் பராசக்தியின் கன்னம் பார்த்து
பாங்காக வாக்தேவி உரைத்தாள் (ப)
ப்ரகாசத்திற்கு ஓர் ஈடு இணை இல்லை ஆன்ம
ப்ரகாசத்தை தந்தருளும் அவளின் (ப)

திடமாக வேண்டும் வைராக்யம் மண்
குடம் போலே குயவனும் நிமித்தமும்
உடல் பற்று நீங்கினால் உண்மை
படமாக புரிந்திடும் அவளழகு (ப)

ஞானத்தின் மகிழ்ச்சி ஓர்புறம் அக்
ஞானத்தின் அழிவு மறு புறம்
ஞாலத்தில் இதனை உணர்த்தவே
ஞாபகம் தந்த புலவர்கள் கூறும் (ப)

## பிஞ்சு மனம் கெஞ்சிக்கேட்கிறது ....!!!

கே இனியவன்



அம்மா ஒருதிசையில் வாழ்க்கை ....!!!
அப்பா ஒரு திசையில் வாழ்க்கை .....!!!
நான் சிறு வயதில் என் தோழியோடு ....
கூட்டாஞ்ச்சோறு விளையாட்டில் .....
அம்மா அப்பா விளையாட்டில் பெற்ற.....
சந்தோசத்தை கூட அனுபவிக்காத ......
என் பெற்றோரின் வாழ்க்கையை ......
நினைத்து வெம்பிக்கொண்டிருக்கிறேன்.....
தட்டிக்கேட்கும் வயதும் இல்லை ......
இந்த சூழலில் வாழவும் முடியவில்லை .....!!!

ஏன் இவர்களிடம் இந்த மனமுறிவு ...?
புரிந்து கொள்ளும் அறிவும் இல்லை ....
அதற்கான அனுபவமும் இல்லை ....
அடிக்கடி அம்மா சொல்லும் வார்த்தை...
அவள் வேண்டும் என்றால் எங்களை.....
விட்டு விடு எங்களை வதைக்காதே .....
நான் பிச்சை எடுத்தாயினும் என் .....
குழந்தையை காப்பாற்றுவேன் ......!!!

அடுத்து அம்மாவுக்கும் அப்பாவுக்கும்.....
இடையில் என்ன நடக்கும் என்ற பயத்தில் .....
போர்க்களத்தில் வாழுகிறான் நான் ....
அம்மாவின் முகத்தில் சிரிப்பு இல்லை....
அப்பாவின் நெஞ்சில் அரவணைப்பு இல்லை ....

ஒப்பந்த திருமணத்தில் வாழ்க்கை வியாபாரம்....
செய்வதுபோல் வாழ்கிறார்கள் என் பெற்றோர் .....
எனக்கு வேலை மூலையில் நின்று அழுவது .....!!!

அம்மாவின் பாசத்துக்கு ஏங்குகிறேன் ...
அப்பாவின் அரவணைப்பிற்கு துடிக்கிறேன்.....
அம்மா விவாக ரத்துக்கு ஏங்குகிறார்....
அப்பா தனிமையை விரும்புகிறார் .....
உச்ச கட்ட மனமுறிவில் என் குடும்பம்....
என் கற்றல் முற்றாக தடைப்படுகிறது.....
கண்டு கொள்ள யாரும் இல்லை.....
உறவுகள் வரும்போது மட்டும் ...
சந்தோசம் நிலவும் போலி ....
வாழ்கையில் என் குடும்பம் .....!!!

பெற்றோரே எனக்கு...
புது ஆடை வேண்டாம் ...
சுற்றுலா பயணமும் வேண்டாம் ....
என் வீட்டில் சிரிப்பு சத்தம் கேட்கனும்...
அம்மா சிரிக்கணும் ..
அன்போடு என்னை முத்தமிடனும் ....
அப்பா சிரிக்கணும் பாசத்தோடு
என்னை தூக்கணும் ...
எங்கள் வீட்டில் சிரிப்பு சத்தம் கேட்டு ...
பலமாதங்கள் ஆகிவிட்டது .....!!!

பெற்றோரே ..
வேண்டாம் விவாக ரத்து ...
வேண்டாம் தொலைக்காட்சியில் ....
குடும்ப பிரச்சனை தீர்வு நிகழ்ச்சி ....
முடிந்தால் எனக்காக வாழுங்கள் .....!!!
என் தோழிகளின் பெற்றோர்
போல் வாழுங்கள்
முடியவில்லையம்மா
என்னால் தாங்க...!!!
இரு கரம் கூப்பி கேட்கிறேன்
" பிஞ்சு மனம் கெஞ்சி கேட்கிறேன் "
எங்கள் வீட்டில் சிரிப்பு சத்தம் கேட்கட்டும் ....???

# ஆணவம் என்கிற அறியாமை

பூமலை

ஆணவம் என்கிற அறியாமை நம்மிடம் உள்ள ஆணவமே அறியாமையைத் தருகிறது. அதாவது ஆணவமே அறியாமையாக வெளிப்படுகிறது. இதை அறியாமை ஆணவம் என்கிறது உண்மை விளக்கம்.

தமிழில் ஆணவம் " இருள் " எனப்படும். வெளி இருள் ( ஆணவம்) நம் அறிவை மறைக்கும். அறிவு மறைய அறியாமை வெளிப்படுகிறது.

வள்ளுவரும் ஆணவத்தை இருள் என்கிறார்.

ஒரு கோயில் மிதியடி காப்பகத்தில் மிதியடிகளை எடுப்பதற்கு டோக்கன் கொடுத்து மிதியடிகளை வேண்டினேன் அப்போது அங்குள்ள பணியாளர் எனக்கான மிதியடிகளை எடுத்து என்முன் வீசினார், இவரோ சிவனாடியார்கள் மிதியடியை காக்கிறோம் என்ற எண்ணம் இன்றி தூக்கி எறிவது அவருடைய ஆணவம் தந்த அறியாமையை காட்டுகிறது.

தென்காசி காசி விசுவநாதர் ஆலயம் கட்டிய ஒரு மன்னன் கோவிலுக்கு வரும் சிவனடியார்கள் அவர்கள் தம் பாதம் என்மீது படவேண்டும் என எண்ணி அக்கோவிலின் படியருகில் தன் உருவத்தை தரையில் செதுக்கியுள்ளான் அவனல்லாவோ சிவத்தொண்டன்?

அட்டணக்கால் போடுவர் சிலர். தனக்கு மேல் ஒருவர் வயதிலோ படிப்பிலோ அதிகாரத்திலோ, வந்துவிட்டால் அட்டணக்காலை எடுத்து விடுவர். யாவருக்கு மேல் ஆண்டவன் ஒருவன் உள்ளானே அவனுக்கு முன் நாம் எம்மாத்திரம் அவர் நம்முடன் என்றும் இருக்கிறார் என்று உணராத அறியாமையே இந்த ஆணவத்தின் காரணம்.

இவை போன்ற நம் அறியாமை ( ஆணவத்தை) நிரம்பி அறிவு என எண்ணி வாழ்கிறோம். நம் அறியாமையே நான், எனது, எனவும், கோபம், காமம், பிடிவாதம், வஞ்சம், எனவும், பலவடிவில் நம்மிடம் வெளிப்படுகிறது. நம் அறியாமை நீங்குவது எந்நாளோ?

நாம் அனைவரும் ஒன்றை அறிகிறோம். பின் அதிலேயே முழ்கிறோம். அதில் முதனிலை அடைகிறோம். பிறவற்றை அறிவதில்லை. அதுவே ஆணவம் என்கிற அறியாமையைத் தருகிறது. பின் நம் வாழ்நாள் முழுவதும் அதிலேயே போய்விடுகிறது.

மாறாக அறியவேண்டியதை அறியவேண்டும். அதிலேயே மூழ்கிவிடாது இறைவனை பற்ற வேண்டும். அது ஒன்றே அறிவுடமை, ஆணவமின்மை, அதுவே பணிவைத்தரும். இறைவனை உண்மையாக, எளிமையாக "எண்ணுவது ஒன்றே அறிவுடைமை" அதுவே நம் ஆணவம் தரும் அறியாமையை போக்கும் வழி.

எனக்கு வாழ பிடிக்கவில்லை
ஆனால்
என் தமிழை விட்டுவிட்டு சாக பிடிக்கவில்லை
அதனால் தான்
வாழ்தலை நேசிக்கிறேன்
தமிழை மூச்சாய் சுவாசிக்கிறேன்

சுபபாலா

## வாழ்த்துகிறேன் உயிராய்...

பாண்டிமா

தானாய் வந்தத் தங்க மயிலே
தேனாய்ப் பேசும் இனியவளே
மைத் தீட்டாக் கரு விழியாளே
அன்பில் அட்சயப் பாத்திரமாய்
குறையாக் குணம் பெற்றவளே

வெண்பற்கள் சிரிப்பழகியிவள்
முதிர்ந்த அறிவில் சிறந்தவள்
பாசத்தில் பரவசம் கொள்பவள்
நிதான நடைக் கொண்டேயிவள்
வெற்றிகளை எட்டிப் பிடிப்பவள்

சின்ன கோபத்தில் சினுங்கியே
மவுனத் திரையில் மறைந்திட்டு
மேகத்துள் புதைந்து பதுங்கியே
மெல்ல துள்ளியோடி வருமென
நிலவாய் ரசிப்பேன் உன்னையே

இதயம் திறந்து காட்டவியலாது
விழி பார்த்து அறிந்திடா அன்பை
உச்சரிக்க வார்த்கள் வாய்த்திடாது
தத்தளித்து என் கரங்கள் கூப்பியபடி
இறைவா உன்னிடம் வேண்டியபடி

மலரத் துடித்த மலர்கள் யாவுமிங்கு
உன்னையே வாழ்த்திப் பூத்ததம்மா
அலைகடலும் கூட ஆர்ப்பறித்தபடி
ஆடிப்பாடி வந்தே வாழ்த்துதேம்மா
யாவுமே சிறப்புடன் பெருகுமம்மா

இறைவனை பற்றிய நம் அறியாமைதான் உலகப் பொருள்களை விரும்ப வைக்கிறது. அது கல்வி, செல்வம், பதவி, புகழ், என வேறுதிசைகளில் நம்மை இழுத்துச் செல்கிறது. ஒருவரைப் பார்த்து ஒருவர் என உலகப் பொருள்கள் மீது விருப்பத்தை வளர்த்து விட்டோம், உலக பொருள்களை ஒரளவுதான் அனுபவிக்க முடியும், அனைத்தையும் நாமே அனுபவிக்க முடியுமா? முடியாது. அளவுக்கு மீறி ஒன்றை விரும்ப அதுவே நம் வாழ்க்கை என்றாகிவிட்டது.

அனைத்து நபர்களிடமும் ஆணவம் உள்ளது. அதில் கூடுதல், குறைவு இருக்கலாம். என்னிடம் ஆணவம் இல்லை என யாரும் கூற முடியாது. ஏனெனின் ஆணவத்தை குறைக்க எழுந்ததே இப்பிறப்பு.

இறைவன் ஆணவமுடைய உயிர்களை கொண்டு உலகில் பலகாரியங்களை நடத்துகிறான். அவர்களது ஆணவத்தை கொண்டே அவர்களை ஒரு கருவியாக்குகிறான். உலகம் இயங்கவேண்டும் அல்லவா? ஆணவமுடைய பலரைப் பார்க்கின்றோம். அப்போது இது அவரது அகங்காரம், கர்வம் என்று எண்ணாது, இரு அவரது அறியாமை எனச் சிந்தித்தால் நம் உயிர் முன்னேற வழி பிறக்கும். உலகில் ஆணவத்தை சைவ சித்தாந்தம் மட்டுமே விளக்கிறது.

திருச்சிற்றம்பலம் ஓம் சிவாய நம

## காத்திருப்புகள்

ஜெயராமன்

*உயிர் மூச்சின்*
*இறுதிக்காக*
*மரணம் இங்கே*
*காத்துக் கிடக்கிறது.*

*வெந்து தணிந்திடும்*
*செங்கோள் சூரியன்*
*மறைவிற்காக*
*இருட்டும் இங்கே*
*காத்துக்கிடக்கிறது.*

*துளை வழி வெளிவரும்*
*ராகங்களுக்காக*
*காற்றின் வரவை நொக்கி*
*புல்லாங் குழல் - இங்கே*
*காத்துக் கிடக்கிறது.*

*இரவு முழுவதும்*
*பனி நீர்ச் சுமைகளை*
*சுமந்து வெறுத்த புல்வெளி*
*சுமைகள் இறக்கிட*
*கதிரவன் வரவிற்காக*
*காத்துக்கிடக்கிறது.*

*தினசரி இருமுறை*
*விழுந்திடும் இரைகளுக்காக*
*இமையாக் கண்களில்*
*தொட்டி மீன் - இங்கே*
*காத்துக்கிடக்கிறது.*

*பசித்த பிள்ளை வயிறு,*
*சுருக்குப் பைகளாய்*
*துவண்ட முலைகளின்*
*அடுத்த சுரப்பிற்காக - இங்கே*
*காத்துக்கிடக்கிறது.*

*ஓடையில் ஓடிடும்*
*சிறுமீன் ஓட விட்டு*
*உறுமீன் வருமென*
*ஒற்றைக்காலில் கொக்கு*
*இங்கே - காத்துக்கிடக்கிறது.*

*இளமைத் துள்ளல்கள்*
*முடிந்த பின்னே*
*காலனின் வரவை நோக்கி*
*வயோதிகம் - இங்கே*
*காத்துக்கிடக்கிறது.*

*சிந்தனைப் பொறியில்*
*சிக்கிடும் கருவிற்காக*
*கவிஞனும் - இங்கே*
*காத்துக்கிடக்கிறான்...*

# இரயில் பயணங்கள்...!!!

காயத்ரி கேசவன்

ஓடிக் கொண்டிருக்கும் இயந்திர வாழ்க்கையில்,
உருண்டோடிக் கொண்டிருக்கும் என் தினசரி இரயில் பயணங்கள்...
விடியலில் எழுந்து வியர்க்க, விறுவிறுக்க
ஓடிவருகிறேன் உன்னை பிடிக்க...
சிறிது தாமதம் என்றாலும், சென்று
விடுகிறாய் என்னை விட்டு....

15 நிமிட பயணத்திற்கு, தினமும்
ஏங்குகிறேன் ஜன்னலோர பயணத்திற்கு,
ஜன்னலோரம் கிடைத்து விட்டால், மெய்
மறந்துவிடுகிறேன் என்னையும், அறியாமல் உன்னில்...
உன்னிடம் விடைபெற்று விட்டு,
பேருந்து பயணத்திற்கு காத்து இருக்கிறேன்...

பேருந்தில் இடிபாடுகளில் சிக்கி,
கால் வைக்க இடம் தேடி நிற்கையில்,
கிடைக்காதா இங்கும் உன் பயணம் என ஏங்குகிறேன்...

அலுவலகம் சென்று வேலையில் மூழ்கி,
பணிச் சுமைகளை முடிக்கிறேன்...
மாலையில் மறுபடியும் பேருந்து பயணம்,
கூட்ட நெரிசலை கடந்து, உன்
இனிய பயணத்திற்காக காத்திருக்கிறேன்...

இரைத் தேடி சென்ற ஒரு கூட்டு, பறவைகள்
மரத்தில் ஒன்றாக இணைவது போல...
பணி முடிந்து வரும் என்னையும், என் தோழிகளை,
ஒன்றாக இணைக்கிறாய் உன் பயணத்தில்...



பள்ளி தோழமை, கல்லூரி தோழமை போல,
நீயும் தருகிறாய் நீங்கா இரயில் சிநேகம்...
வயது வித்தியாசமற்ற தோழமையுடன்,
கவலைகள் மறந்து அரட்டை அடித்து,
களிப்புறுகிறோம் உன் பயணத்தில்...

வளைந்து நெளிந்து சென்றாலும்,
தடம் மாறி செல்லாமல்,
தாங்கி செல்கிறாய் எங்களை பாதுகாப்புடன்...
நீயே வாழ்க்கை பாடம் கற்பிக்கிறாய், இதன் மூலம்...

வாழ்க்கையில் ஏற்ற இறக்கம் வந்தாலும்,
தடைகள் பல வந்தாலும்,
தாங்கி செல்ல வேண்டும் புன்னகையுடன் என்று...
விருப்பம் இல்லாமல் விடை பெறுகிறேன்,
உன் பயணத்தில் இருந்து,
மறுநாள் உன் பயணத்திற்கான காத்திருப்புடன்...

தினசரி இயந்திர வாழ்க்கையில்,
தித்திக்க வைக்கும் உன் பயணங்கள்,
திரும்ப பெறா இனிய தருணங்கள்....

# பகடி வெண்பா!

அகரம் அமுதன்

*"இவ்வெண்பாக்களின் வடிவம் மாறாமல் விரும்பினால் தங்களின் தோழர், தோழிகளின் திருமண நிகழ்வில் இவற்றைப் பயன்படுத்திக் கொள்ளலாம்."*

தீட்டிய பாவில்தான் தீஞ்சுவையோ? இல்லை'மை'
கூட்டிய பார்வையில்தான் கொங்(கு)உளதோ?—கேட்டவுடன்
நேற்றுவரை பாவென்றாய்; நேரெதிராய் நாளை'மை'
ஊற்றிய பார்வையென்பாய் ஓர்ந்து! (1)

சித்திரம் சின்னச் சிலையொத்த மேனியினாள்
பத்திரம் அப்பாநீ பார்த்துக்கொள்; -அத்திரங்கள்
போடட்டும் காமன்; புதுமண மக்காள்!நன்(கு)
ஆடட்டும் கட்டில் அசைந்து! (2)

இடம்மாறும் பெண்ணால் இடம்மாறும் நெஞ்சம்;
இடம்மாறும் பெண்ணில் இயைவால்; -இடம்மாறும்
யாவும் அணைப்பால்;யார் ஆண்பெண்ணென்(று)
யார்சொல்வார்?
ஓவும்பூங் காற்றும் உணர்ந்து! (3)

சந்தியா காலத்திற் சந்தித்து நீரிருவர்
சந்தியாக் காலத்தைச் சாடுவிரோ? —சிந்தைநீ
செய்கும் தமிழ்மொழி தேமொழிக்கீ டில்லையென்று
வைகுமோ நண்பா!உன் வாய்! (4)

'நான்'என்று சொல்கின்ற நாள்ஓடிப் போச்சு(து)இனி
'நான்'அன்று 'நாம்'என்று நாமொழியும்; —தேன்இப்போ(து)
உள்ளங்கை தன்னில்; உணத்தான் தடைபோடும்
உள்ளபடி நாணம் உயர்ந்து! (5)

நங்கை தலைசாயும் நாணத்தால்; அப்பவும்என்
பங்கைத்தா என்றே பகர்வாயோ? —நுங்குநிகர்
நாவால் அவள்பேர் நவின்(று)அரு கேஅழைத்துத்
தேவாய் சுவைக்கையில் தேர்ந்து! (6)

உண்ணா வறண்டே உடலம் உதறுமப்பா;
உண்ணாய் பசித்தும் ஒருவாய்; -எண்ணாய்
எதையும்; அணங்கின் எழில்கண்(டு) உளறும்
அதையும் இதையும்வாய் ஆம்! (7)

பாயே இலையாக பாவை உணவாக
நீயோ பசியில் நெலிவாயே; -நீயாக
அள்ளித்தான் உண்ணவும் ஆகாதே; நாணத்தால்
உள்ளந்தான் நோகும் உடைந்து! (8)

பசிக்கும்; பசும்பால் பழம்பக்கம் இருந்தும்
புசிக்கும் நினை(வு)அற்றுப் போகும்; -புசிக்கின்
புளிக்கும்; உளம்அந்தப் பூவை இடம்மேவிக்
களிக்கும் தடைகள் கடந்து! (9)

முத்தம் பிறக்குமிடம் முந்நீரோ? செவ்விதழோ?
பித்தத்தால் நீயும் பிதற்றுவாய்; -அத்தானின்
ஐயத்தைப் போக்க அவளும் வழங்குவாள்
செய்யவாய் மேலும் சிவந்து! (10)

கச்சிருக்கும் போதும் கரும்புவில்லோன் அம்பிலொன்று
தச்சிருக்கும் போதும் தழும்பேறி —மொச்சிருக்கும்
கொங்கை மிகவாட்டம் கூட்டாதோ? உன்னிரண்டு
செங்கை படத்தான் திரண்டு! (11)

எட்டிக்காய் பற்றி இழுத்துச் சுவையாமல்
எட்டிக்காய் என்றே இகழ்வாழோ? —எட்டிக்காய்
கின்றமதி இன்முகத்தாள் கேள்வா! அவளிரண்டு
நின்றமுலை தெங்கிள நீர்! (12)

தப்பெல்லாம் இங்கே சரியாம்; சரிதப்பாம்;
எப்போதோ நான்கண்ட உண்மையிது; -இப்போது
காணத் துடிப்பவனே! காலை அதைக்கேட்டால்
நாணித் துவள்வாயோ நன்று! (13)

தோல்வியில்லாத் தோல்வியிது; தொல்லையில்லாத்
தொல்லையிது;
வேல்வியில்லா வெல்வியிது; வேல்வியந்த –
வேல்விழியாள்;
ஊற்றும்நெய் நீ;உன்னை ஊற்றின் வரமாக
ஈற்றில் விளைந்திடும் இன்பு! (14)

அழகான பெண்ணை அணைப்பாய்; அவளும்
பழகாத பாடம் பயில்வாள்; -அழகில்
அழுந்திக் கிடந்தே அமுதம் எடுக்க
எழுந்து நடக்கும் இரா! (15)

சேவல் எழுப்பச் செழுங்கதிரோன் வான்மேவ
போவதேன் அல்இப் பொழு(து)?என்றே —ஆவல்
தணியா மனத்தாய்! தவிதவிப்பாய்; மற்ற
பணியாவும் போகும் மறந்து! (16)

இராமல் அகலும் இயல்பால் இரவை
இராவென்(று) எவரும் இயம்ப —இராமலே
வைகலும் வைகல் வரக்கண்டு நீநொந்து
வைகலை வைகுவையோ வந்து? (17)

உடலே விறகா; உளமே உலையா;
அடடா விழியே அனலா; —நடக்கும்
சமையல் முடிவில் சனிக்கும் மழலை;
உமையே உருவாய் உரித்து! (18)

# மரணத்தின் கடைசி நொடி...

கனிகீல்வரி



மலையின் உச்சியில் நான் நின்று கொண்டு இருக்கிறேன், இனி வாழக்கூடாதென முடிவெடுத்து விட்டேன், என் வாழ் நாளில் நான் சில மணித்துளிகள் கூட மகிழ்வுற்றதாய் நினைத்ததே இல்லை, இது போல வாழ்வதை காட்டிலும் மலையின் உச்சியில் இருந்து குதித்து தற்கொலை செய்து கொள்வதென முடிவெடுத்துள்ளேன்.....

நான் இன்று இம்முடிவை ஏதோ அவசரத்தில் எடுக்கவில்லை, நிதானமாய் யோசித்து சில நாட்களாய் எப்படி சாவதென மனதுக்குள் பலமுறை ஒத்திகை பார்த்தே நான் இம்முடிவை எடுத்துள்ளேன்...நான் இறந்த பின் எனக்காய் யாரெல்லாம் அழுவார்கள் என்று நான் நினைக்கவில்லை, நான் இருக்கும் போது யாருமே எனக்காய் இல்லையென்றே நினைக்கிறேன....

## அகம்தீயாய்

சுபபாலா

ஒவ்வொரு ஈழத்தமிழனும்
அகதியாக மட்டும் அல்ல .......!!!
அகம் முழுதும் தீயோடுதான் இருக்கிறான்
தீயே .....!
இவனை தீண்ட அஞ்சும் .......!!!
இருந்தும் இன்னொரு துரோகத்தை தாங்க முடியாததால்
தான்
காற்றில் பறக்கும் பஞ்சாய் போனான் .......!!!
பஞ்சம் பிழைக்க அல்ல ........!!!
எஞ்சிய
உயிரை மட்டும் பிழைக்க புறப்பட்ட
பரதேசியானான் ...........!!!
ஆனால்
அகதியாய் மட்டும் அல்ல !!!
அகம்தீயாய் தான் வாழ்கிறான் .........!!!

இதோ இன்னும் சில மணித்துளிகளில் நான் சிதறியபடி என் உயிரை விட்டிருப்பேன், என் சாவுக்கு யாரையும் காரணமாக்கி விடக் கூடாதென முடிவெடுத்தே நான் எனக்கு பலக்கப்படாத இவ்விடத்திற்க்கு வந்திருக்கிறேன். நான் சாவதென முடிவெடுத்தவுடன் முதலில் யோசித்தது தூக்கு மாட்டிக் கொள்ளலாமா எனத்தான், ஆனால் தூக்கு மாட்டி செத்தால் நாக்கு வெளியில் தள்ளி பார்க்கவே அகோரமாய் இருப்பேன் என்பதால் அதை கைவிட்டேன்...

ஆசனவாய் வலியாய் எனிமா செலுத்தி என்னை கேலிப் பொருளாக்கி விடுவார்கள், அதனால் மருந்து குடிப்பதையும் வேணாம் என முடிவெடுத்தேன்,,,, அது மட்டும் இல்லை மருந்து குடித்தால் பலமணி நேரம் வலியால் துடிக்க வேண்டுமாம்....

## சடுதியாய் வாருங்கள்..

காரை.கே.எஸ். விஜயன்

எனது
அன்பு மாமியாரே..!!
எத்தனை நாளாயிற்று
என்னை விட்டு
பிரிந்து சென்று..??
மகள் வீடென்றாலும்
மாதக்கணக்கிலா
தங்குவார்கள்..??

ஓரெட்டு
போய்வாறேன்
என்றீகள்
ஏழெட்டு, எட்டெட்டு
நாளாச்சு
இன்னுமேன் வரவில்லை
எனதருமை மாமியாரே..??

நீங்கள் இல்லாத வீடெனக்கு
நரகமாய் இருக்கு...
ஊணுறக்கம்
கொள்ளவில்லை
மனம் ஓரிடத்தில்
நிற்கவில்லை
சூனியம் பிடித்தாற்போல்
தினம் சுற்றுகின்றேன்
வீடெங்கும்..

எனவே,
என் அன்பான
மாமியாரே..!!
இக்கடிதத்தை
தந்திபோல் பாவித்து
சடுதியாய் வாருங்கள்
நாம்
சண்டைபோட்டு நாளாச்சு..

ஆதால் அதையும் தள்ளி வைத்து விட்டு அடுத்து என்ன செய்யலாம் என யோசித்தேன்.....

கிணற்றிலோ ஆற்றிலோ குதித்து உயிரை விட்டு விடுவதென முடிவெடுத்தேன்.. ஒருவேளை நாம் குதித்த நேரம் யாரும் பார்த்து காப்பாற்றி விட்டால் எத்தனை கேவலாமாய் பேசுவார்கள், குடிக்க தண்ணியில்லா ஊரிலே குளமோ கிணறோ நீருடன் இருக்குமா என்பதும் கேள்விக் குறிதான்....

அடுத்த முடிவு தூக்க மாத்திரை சாப்பிடுவதென முடிவெடுத்தேன், ஆனால் மருத்துவரின் ஆலோசனையின்றி மாத்திரை தர மறுக்கும் மருந்து கடைக்காரர்கள் இருக்கும் வரை நம் சாவு எளிதாக முடியாதென நினைத்தேன்…

கைநரம்பை அருத்துவிட்டு சுடுநீரில் வைத்தால் உயிர் போகும் வலி தெரியாதென கேள்விப்பட்டு செய்ய நினைத்தேன் அது வலி அதிகம் என தெரிந்த நண்பன் மூலம் அறிந்து கொண்டேன்….

~~~கல்பனா பாரதி~~~



*அந்திப்பொழுதின் அழகினில்*
*ஆகாயச் சிவப்பின் மௌனம்*
*ஆழ்கடலின் நீலநித்திரையில்*
*உறங்கிக் கிடக்கும் மௌனம்*
*தென்றலின் மெல்லிய தழுவலில்*
*பொழிலில் நிறைந்து நிற்கும் மௌனம்*
*மூடியிருக்கும் மொட்டிலும் மௌனம்*
*மெல்ல இதழ் விரியும் பூவிலும் மௌனம்*
*மோனத் தவம் புரியும் ஞானியின்*
*ஆழ் மனதின் சலனமற்ற மௌனம்*
*வைகறைப் பொழுதின் தூய மௌனம்*
*பனித்துளிகள் மலரிதழில் துயிலும் மௌனம்*
*பாதி மூடியும் முழுதும் திறவாத அவள்*
*இதழ்களில் முத்துக்கள் கைகோர்த்து நிற்கும்*
*புன்னகையில் பொருள் பொதிந்த மௌனம்*
*இயற்கையின் எழில் காட்சிகளில்*
*தன்னை மறந்து நிற்கும் கவிஞனின் மௌனம்*
*ஆகாயம் முதல் ஆழ் மனது வரை மௌனமே*
*உன் அதிசய வடிவங்களும் அழகிய பிம்பங்களும்*
*ஆனந்தம் ஆனந்தம் என்றுமே !*

பேருந்தின் முன் விழுவது, மாடியில் இருந்து குதிப்பது, மண்ணெண்ணை ஊற்றிக் கொள்வது, விசம் சாப்பிடுவது என பலவாறு யோசித்துப் பார்க்கிறேன்.. எதுவுமே சரியாய் எனக்கு தோன்றவேயில்லை, கடைசியில் மலைமீது இருந்து குதிப்பது என முடிவெடுத்தேன்……

என்னை யாருக்கும் அடையாளம் தெரியாத ஊரில் இம்மலை இருப்பது எனக்கு வசதியாகிப் போனது, நான் மெதுவாய் எட்டிப் பார்த்தேன் நிச்சயம் இங்கிருந்து குதித்தால் எலும்பும் கூட மிஞ்சாது, என் மூச்சை சீராய் இழுத்து விட்டேன், என் கண் முன்னால் அவள் முகத்தை கொண்டு வந்தேன்.

அவளை நினைத்தபடி வாழமுடியவில்லை அவளை

## *சமையல்:* அரிசிமாவுப் புட்டு

பாண்டிமா



**தேவையான பொருட்கள்**

அரிசி மாவு ……………… ஒரு கப்

உப்பு …………………….. தேவைக்கேற்ப

சீனி ……………………… 1/4 கப்

தேங்காய்த்துருவல்………… 1/4 கப்

**செய்முறை**

அரிசி மாவில் தேவையான அளவு சிறிது சிறிதாக சுடு நீர் சேர்த்து சிறிதளவு உப்பு சேர்த்து கெட்டி பிடித்துவிடாமல் உதிரியாக கிளறி வைக்கவும்

இட்டலிச் சட்டியிலோ புட்டுக் குழாயிலோ கொஞ்சம் மாவையும் கொஞ்சம் தேங்காய் துருவலுமாக மாறிமாறி போட்டு அவித்தெடுக்க சுவையும் மணமுமாக புட்டு ரெடி.

அழகான கிணணியில் புட்டைப் போட்டு சிறு கரண்டியோடு தந்தால் ஆசையா சாப்பிடுவார்கள். இதில் முக்கியமாக கவனிகக வேண்டியது புட்டு மிருதுவாக இருக்க, கிளறிய மாவு சிறு கட்டிகளாக திரண்டு இருந்தால் புட்டு சற்று விரைப்பாகி விடும். அதனால் கிளறிய மாவை மிக்சி சின்ன ஜாரில் கொஞ்சம் கொஞ்சமாக போட்டு ஒரு சுற்று மட்டும் சுற்ற விட்டு எடுத்தால் மாவு உதிரியாகவும் பொலு பொலுப்பாகவும் இருக்கும். அதன் பிறகு அவித்தெடுத்தால் மிருதுவாக இருக்கும்.

புட்டுக்கு கூட்டாக பழம், அப்பளம், அவித்த பயறு, கொண்ட கடலை கூட்டு அல்லது சீனி இவை சுவையாக இருக்கும்

செய்து பாருங்கள். பிறகு என்ன ? பாராட்டுதான்.
~~~

பூ என்பது ஓர் எழுத்து
அந்த பூவை சூடும் பெண் என்பவள் இரண்டு எழுத்து
அந்த பெண்ணால் வரும் காதல் என்பது மூன்று எழுத்து
அந்த காதலால் வரும் மரணம் என்பது நான்கு எழுத்து
இதுவே இன்றைய இளைஞர்களின் தலை எழுத்து

தளபதி ராம்குமார்

நினைத்தபடி சாவதென முடிவெடுத்தேன்.. அவள் முகம் இன்று சற்று புகை மூட்டாமமாய்தான் என் கண் முன் தெரிந்தது, ஏனோ அவள் இதழ்கள் கூட சிரிக்கவேயில்லை, ஒருவேளை நான் சாவது அவளுக்கு முன்னமே தெரிந்திருக்குமோ, உள்ளுணர்வு என்று சொல்வார்களே அது அவளுக்கு உணர்த்தியிருக்குமோ?

எது எப்படி நிகழ்ந்த போதும் இனி நான் வாழ்வதாய் இல்லை, அவளுடன் வாழ முடியாத நான் இனி வாழத்தகுதி அற்றவன், எனவே என்னை மன்னித்துவிடடி உன் கழுத்தில் மங்கல நாண் ஏற இன்னும் சில மணித்துளிகள் தான் மீதி இருக்கிறது, உன் மணவாழ்க்கை என் மரணத்தின் மூலம் தொடங்கட்டும், உன்னை என் உயிராக நினைத்து வாழ்ந்துவிட்டென் இதுவரை, இனி நீ யாருக்கோ சொந்தமானவள் அடுத்தவன் மனைவியாகப் போகிறவள். உன்னை நினைப்பது நியாயமில்லை… நான் உன்மீது வைத்த காதலை என் உயிர் விட்டு நிரூபிக்க போகிறேன்….

என் கடிகாரத்தை பார்க்கிறேன் இன்னும் இரண்டு விநாடிகள் தான் இருக்கிறது என் இறுதி துடிப்புக்கு, அதன் பின் என் உயிரை அவளுக்கு கல்யாண பரிசாய் தந்துவிடுவேன்….

மைதிலி உன்னை நினைக்கையில் உருகுதடி என் நெஞ்சம். என் மரணத்திற்கான கடைசி நொடி இதோ முடிந்துவிட்டது குதித்து விடப் போகிறேன்…

என் சட்டைப் பையில் அலைபேசி அலரல், என் மைதிலியாய் இருக்குமோ என நினைத்து எடுத்தேன், என் நண்பன் முகுந்தன் அலைப்பில் துண்டிக்க மனம் இல்லை கடைசி வார்த்தை நண்பனிடம் பேசியதாய் இருக்கட்டும் என்று நினைத்தே எடுத்தேன்…..

“டேய் மச்சா எங்கம்மாவுக்கு ரொம்ப முடியலைடா பிளீஷ் உங்கிட்ட பணம் இருந்தா அனுப்பி வைடா, நான் எப்படியும் அம்மாவ காப்பாத்தியே ஆகணும் பிளீஷ் டா” என்று கதறினான்….

என் மரணத்தை இன்னொரு நாள் தள்ளிப் போட்டேன், என் நண்பனுக்கு உதவ அவசரமாய் மலைச்சரிவில் இறங்கி வங்கி நோக்கி பயணிக்கலானேன்….

## பாதுகாப்பு தேவை

**வித்யாபரன்**

*பாதுகாப்பு தேவை*
*எனக்கும்*
*என்னைச் சார்ந்தோருக்கும்,*
*என் தாய் நாட்டிக்கும்*
*என் தாய் மொழிக்கும் தான்.*

*பாதுகாப்பு வேண்டும்.*
*என்னைப் போன்ற பத்திரிகையாளர்களுக்கும்,*
*மனித உரிமையாளர்களுக்கும்,*
*அரசின் கொள்கைகளைச் சான்றிராதோருக்கும்,*
*சிறு பான்மை இனத்தவர்களுக்கும் தான்.*

*பாதுகாப்புத் தேடுகிறேன்*
*என் நாட்டைச் சூரையாடிக் கொன்டிருக்கும்*
*தலைமையிடம் இருந்தும்,*
*எங்களால் உயர்த்தப்பட்ட*
*இரத்தக் காட்டேரிகளிடம் இருந்தும்,*
*அரசு என்ற பெயரில் கொள்ளையிடும்*
*குடும்பத்திடம் இருந்தும்*
*காவல் என்ற போர்வைக்குல் உயிர்களை*
*சூரையாடும் அதிகாரத்திடமிருந்தும் தான்.*

*பாதுகாப்பு இல்லை*
*என் தாய்க்கும் தந்தைக்கும்,*
*என் உடன்பிறப்புகளுக்கும்,*
*என் மழலைகளுக்கும்,*
*என் நாட்டு தேச பக்தர்களுக்கும் தான்.*

*பாதுகாப்பு உண்டோ*
*எம் பத்திரிகையாளரின் உயிருக்கு,*
*எம் போராளிகளின் தேச உணர்விற்கு,*
*எம் குழந்தைகளின் கற்பிற்கு*
*எம் மக்களின் பேச்சுரிமைக்கும் தான்.*

*பாதுகாத்து தாருங்கள்*
*எம்மைப் பிரிந்த உறவுகளுக்கு,*
*எம்மிடம் பறித்த சொத்துகளுக்கு.*
*எம்மிடம் பிடுங்கிய உரிமைகளுக்கு,*
*எமது தாய் நாட்டுக்கும் தான்*

*உலகில்*
*பல மனித உரிமை கூட்டமைப்புகள்*
*உண்டு. இருந்தும்*
*எதற்காக இன்னும்*
*இலங்கையில்*
*இத்தனை மனித உரிமை அத்துமீறல்கள்?*

# உழவு போற்று !

கலை

மலைமுகட்டில் பனியிறங்கும் வேளை - கிழக்கில்
தலை துவட்டிப் பரிதிவரும் காலை -
முகிலெடுத்து முகம்துடைக்கும் சோலை - உழவன்
முனைப்போடு தொடங்கிடுவான் வேலை !

◆◆◆

வயல்வெளியில் குருவிகளின் ஆட்டம் - நெற்
பயிரிடையே எலி நடத்தும் கூட்டம் -
கண்டபோது உழவனுக்கோ காட்டம் - அவன்
சத்தங் கேட்டு எலி, குருவி ஓட்டம் !

◆◆◆

கோவணத்தைக் கட்டிக்கொண்ட உழவன்- வயது
எழுபத்து தாண்டிவிட்ட கிழவன் !
ஆவணமாய் வயல் எழுதும் மறவன் - அவனே
அண்டமகிலம் அத்தனைக்கும் அரசன் !

◆◆◆

உடல்முழுதும் பூசி நிற்பான் சேறு-அவன்
உள்ளத்திலே இருப்பதில்லை ஊறு !
சளைக்காமல் ஓட்டிடுவான் ஏரு - ஊருக்கு
களைக்காமல் ஊட்டிடுவான் சோறு !

◆◆◆




கடலாக திரண்டோடும் வேர்வை- அவன்
கண்டதில்லை ஒருபோதும் சோர்வை !
வறுமையவன் போர்த்திக் கொள்ளும் போர்வை
அதை- கிழித்தெறிய அரசிற்கில்லை பார்வை !

◆◆◆

பச்சைசேலை கட்டிக் கொண்ட பூமி -அதில்
பாடுபடும் மனிதன் தானே சாமி ?
உழவனுக்கு இணையிங்கு ஏது - அவனை
போற்றஒரு வார்த்தைக் கிடை யாது !

◆◆◆

# மௌனங்கள் உயிர்த்தெழுந்தால்

மணிகண்டன்

பகுதி 24




கோடான கோடி விழிகள் கடந்து வந்தும்
நின் விழி குறிப்புகள் மட்டுமே மொழி பெயர்த்துள்ளேன்
மௌனமும் மௌனம் சார்ந்த விழிகளின் மொழிகளும்
எல்லாம் நின் விழி செயல்!

♥♥♥

பெரியதாக ஒன்றும் ஆசையில்லை நாமிருவருக்கும்
ஒரு கோப்பை தேநீரை
ஆளுக்கொரு பகுதியாய் பகிர்ந்திர வேண்டும் என்பதை தவிர !

♥♥♥

எத்துனை தொலைவிலிருந்து துணை நமக்கு
பறக்கும் முத்தங்களை பகிர்ந்துகொள்கிறோம்
காற்றுக்கும் சற்று பொறாமை அதிகம்தான் போல !

♥♥♥

அநேக நேரம் கண்ணன் என்றே அழைக்கிறாய்
நான் பாடும் கண்கள் எனை காணாமலே
கண்ணன் என்றழைக்க மூங்கில் காடுகளில்
முளைத்திடாத வித்துக்கள் எல்லாம்
இசை கற்க ஆவலென செவிவழி செய்தி !

♥♥♥

நீ கோலமிடுகையிலே வெள்ளை
அதன் கோலபொடி தொட்டு
உந்தன் கண்ணத்தில் திருஷ்டி மையிடும்
காற்றால் கலையும் முடியின் வழியே
நின் விரல் கொண்டு !

♥♥♥

ஈரமான காற்றில் தென்றல் கொண்ட
நேசமது சுவாசமாகும் போது
நேசமே நீ அருகில் இல்லாத பொழுதும்
உன்னை காற்றினில் காற்றினுள்
கைகோர்த்து அனைத்துக்கொள்கிறேன்!

♥♥♥

அநேக நேரம் காதலை பற்றியே
முணுமுணுத்து கொண்டிருக்கிறேன் என்கிறார்கள்
கேட்பாரற்று கிடந்தவனின் மொழி
இன்று கேட்க காத்திருப்பவர்கள் இருக்க
சுவாசம் தந்த நின் விழியின் மொழி காதல்தானே
அதைதானே அசைபோடுகிறேன் !

♥♥♥

நின் விழியால் என்னில் களவு நடத்தினாய்
இன்று தன் விழியால் கனவினை
கனம் இன்றி செய்ய கைகோர்த்து நிற்கிறாய்
எனக்கு உன்னை மட்டுமே அதிகமாய் பிடிக்கும்
நீ என்பதால் !

♥♥♥

# இறகுப்பந்துவிடு தூது!

அகரம் அமுதன்

காற்றில் எழுந்து கணக்காய் நனிவிரைந்து
மாற்றார்க்குத் தப்பிவிடின் மண்வீழ்ந்து –தோற்றாராய்
ஆக்கத் தெரிந்த அழகிறகுப் பந்தே! என்
ஏக்கமறிந் தென்னவள்கண் ஏகு!

ஏகும் முனமென் இளநெஞ்சைத் தொட்டுப்பார்!
வேகும் அவள்நினைவின் வெப்பத்தால்; -ஆகம்*
இழைபோல் இளைத்த இவன்நிலையைச் சொல்லி
அழைப்பாய் அவளைச்சென் றாங்கு! (ஆகம் -உடல்)

ஆங்கவளைக் கண்டால் அருங்கதைகள் பேசிப்பின்
தேங்குவளைக் கண்ணாட்குச் சேவைசெய்! –
பாங்காய்ப்பின்
என்நிலையைச் சொல்க! எழுங்காதல் மிக்குடையாள்
தன்நிலையைச் சொல்வாள் தளர்ந்து!

தளர்ந்து தனித்துத் தவிக்கின்றேன் நீபோய்
வளர்ந்தமுலை மாதை வரச்சொல்! –குளம்வாழ்
மரைமுகத் தாளும் மறுப்பாள் எனிலோ
இறப்பான் இவனென் றியம்பு!

இயம்புங்கால் அன்னவளின் இன்முகத்தை நோக்கு!
மயங்கும் விழிகள்; மருள்வாள்; -தயங்காதே!
நண்டுறை நீர்த்துறையில் நானுள்ளேன்; என்னுயிரோ
ஒண்டொடி தன்சொல்லில் உண்டு!

உண்டா எனக்கேள் உறுகாதல் என்மீதிற்
பெண்டாள் இலையென்னாள்; பின்பென்ன? –பண்டென்
உளங்கள வாடி உவந்தாள்தன் மேனி
வளங்கள வாடுகிறேன் வந்து!

வந்தாரக் கட்டி வளஞ்சேர்க்கச் சொல்தன்னைத்
தந்தாலே என்னுயிர் தங்குமெனும் –அந்தப்பேர்
உண்மையினைச் சொல்லி உளமறிந்து வா!இந்த
நன்மையினைச் செய்க நயந்து!

நயந்தேன்; அவளின் நறுந்தேன் உடலை
வியந்தேன்; இதனை விளம்பத் –தியங்குமென்
ஆவியுண் கண்ணாள் அருகிருந்தென் னையணைக்கத்
தூவிறகுப் பந்தே!போ தூது! (தியங்குதல் –கலங்குதல்)

தூதாக நீயுமத் தோகை இடஞ்செல்லத்
தோதாவாய் என்பதினால் சொல்லிவைத்தேன் –
போதாயோ?
மெல்லபோ கின்ற மிறல்*பந்தே! பெண்நெஞ்சை
வெல்லப்போ கொஞ்சம் விரைந்து! (மிறல் -பெருமை)

விரைந்துநீ போய்யென் விருப்பம் உரைப்பாய்
கரந்தமனத் தாளவளின் காதில் –சுரந்துவரும்
வாயிதழின் சாற்றில் வழுக்கிவரும் சொல்லேயென்
காயத்தை வாழ்விக்கும் காற்று!

## கவிதையின் ரசனையும் சுயநலம் தான்....!!!

கே இனியவன்

*காதல் செய்யும் வயதில்*
*காதல் கவிதையை*
*நேசித்தேன் ...!!!*
*காதல் தோல்வி கண்ட போது*
*காதல் வலி கவிதையை*
*நேசித்தேன் ...!!!*

*வாழ்க்கைக்கு வந்தபோது*
*வாழ்க்கை கவிதையை*
*நேசித்தேன் ...!!!*
*உறவு பிரிவை சந்தித்த வேளை*
*அன்பு கவிதையை*
*நேசித்தேன் ...!!!*

*பாசங்களை உணர்ந்த போது*
*பாச கவிதையை*
*நேசித்தேன் ...!!!*
*பட்ட கஸ்ரங்களை பகிர*
*நட்பு கவிதையை*
*நேசித்தேன் ...!!!*

*காயமே இது பொய்யடா*
*வெறும் காற்றடைத்த*
*பையடா உணர்ந்த போது*
*ஆன்மீக கவிதையை*
*நேசிக்கிறேன் ...!!!*

*கவிதையின் ரசனையும்*
*தேவையும் விருப்பு வெறுப்பும்*
*அவனவன் சுயநலத்தில் தான்*
*உள்ளது...!!!*

## பிரம்மச்சரியம் என்றால் என்ன ?

சிவனருள் கருணாகரன்

பிரம்மச்சரியம் என்றால் என்ன ? எனும் ஆரோக்கியமான கேள்விக்கு பதில் தரப்படுகிறது.

முதலில் பிரம்மம், பிரம்மா, பிரம்மச்சாரி, பிரம்மசர்யம் நான்கும் வெவ்வேறு பொருள் கொண்டவைகள் என்பதனை புரிந்து கொள்ளல் வேண்டும்.

ப்ரம்மம் என்பது நமது கண்கள், புலன்கள், அறிவுக்கு எட்டாதது, எங்கும் நீக்கமற வியாபித்து நிறைந்திருப்பது.

பிரம்மா என்பது படைப்பு தொழில் புரிபவரை சுட்டும் சொல். பிரம்மச்சாரி, பிரம்மச்சாரினி என்பது திருமணமாகாத, எந்த ஒரு பெண்ணையோ, ஆணையோ மோகம் கொள்ளாதவர்களை குறிக்கும் சொல். பிரம்மசர்யம் எனும் சொல்லின் பொருள் உணர்தல் மிக அவசியமா கின்றது. பெண்ணாசையை விடுவதற்கு பிரம்மசர்யம் என்பது பெயரல்ல .

பிரம்மச்சாரி என்பதே பெண்ணின் துணையை தேடாதவரை குறிக்கும். ஆனால் ப்ரம்மச்சர்யம் என்பது ப்ரம்மத்தை உணர்தலுக்கு தயாராவதை குறிக்கும் சொல்லாகும். ப்ரம்மத்தை உணர்தலுக்கு உட்படும் மனிதனுக்கு பலவித கடுமையான பரீட்சைகள் இயற்கையால் தரப்படுகிறது. இவைகளில் தேர்ச்சி பெற மனிதன் பலபடிகளை தேர்ச்சி பெற்று கடப்பது அவசியமாகின்றது.

புற ஒழுக்கம், அக ஒழுக்கம் மட்டுமல்லாமல், கண்களாலும், சொல்லினாலும், கேட்பதாலும், உடலாலும் முழுமையாக ஒழுக்கம் காக்கப்பட வேண்டும். வேதம் உணர்தலும், அதன்படி சிந்தித்தலும், நடப்பதுவும் முக்யமான பங்காகும். நான், எனது எனும் மமகாரம், அகந்தை அறவே அழிக்கப் படவேண்டும். சொல்லால் மட்டுமல்லாமல் செயலாலும் ஒழுக்கம் காத்தல் வேண்டும். ப்ரம்மத்தை அறிதலுக்கான முயற்சி என்பது எளிதான ஒன்றல்ல . சரியை எனப்படும் வைராக்கிய நெறிகொள்ளல் மிக அவசியம். இவ்விரண்டு சொற்றொடர்களின் இணைப்புதான் ப்ரம்மசரியம்.

ப்ரம்மம் : எங்கும் வியாபித்துள்ள பரம்பொருள் .

சரியை : பரம்பொருளை கண்டடைவேன் எனும் வைராக்கிய உறுதி.

பிரம்மச்சர்யை எனும் பதம் மருவுதல் கண்டு பிரம்மசர்யமாய் மேவி நின்றதுவாம்.

இந்திரியங்களை அடக்கி, காமத்தை துறந்து, அகந்தையை அழித்து, கோப, தாபங்களற்று எனது பிறப்பின் காரணம், பரம்பொருளை அடைவது ஒன்றே எனும் வைராக்கிய சிந்தையோடு அதற்கான வழிதேடி, அந்த வழி சென்று, வழிபட்டு பரம்பொருளின் திருவடி அடையும் பல வித மார்க்கங்களில் பிரம்மசர்ய மார்க்கமும் ஒன்று .

ப்ரம்மசர்ய மார்க்கம் சென்று ப்ரம்ம பதத்தை அடையுங்கள், அந்நிலையை நீங்கள் அடைய வாழ்த்துகள்.

வளமோடு வாழுங்கள், வாழும் நாளெல்லாம் .

## உனக்கும் எனக்குமான மொழி...

கனிகீஸ்வரி



என்னவெல்லாமோ செய்து பார்க்கிறேன்
என் நெஞ்சில் உன் நினைவகற்ற.
அத்தனையும் தாண்டி என்னை ஆரத்தழுவி
நிற்கிறது உன் நினைவுகள்.

எதுவுமே இன்று எனதில்லைதான்
எப்போதும் உன் நினைவு என்னோடுதான்
நீ உன் மனவாசல் கதவடைக்கிறாய்
புலம்பல்களால் உன் செவி சேர்க்கிறேன்..

காற்று வழி அனுப்புகிறேன் என்
கவிதைகளை உனக்கு தூதாய்
கதறி அழும் கண்ணீர்த்துளிகள்
கண்டும் காணாதது போல் நீ..

இதயச் சலவை பலமுறை செய்தும்
இடைவிடா நினைவுகளாய் தடம்பதிக்கிறாய்
நெஞ்சமதில் தீ மூட்டி எண்ணங்களால்
எரியூட்டுகிறேன் எரிந்திடா உன் நினைவுகள்.

ஆழத் தைத்த ஊசியகற்றி நீ
அன்பெனும் மருந்தாள் ஒத்தடமிட்டு
பழுக்க காய்ச்சிய இரும்பொன்றால்
பதறிடாமல் துளையிட்டு போகிறாய்.

தேம்பியழும் தெம்பற்று போனேன்
ஏங்கியே என் உடல் வற்றிப் போனேன்
எண்ணத்தில் நீ இருந்த போதும்
எடுத்துரைக்க மொழியற்றுப் போனேன்

உன் இதயக் கூட்டில் நான் தனித்தில்லை
உன் எண்ண ஏட்டிலும் நான் எழுத்தில்லை
என்றபோதும் உன்னிடம் கோபமில்லை
என்னை விட்டுப் போவது துளி நியாயமில்லை

அன்பாய் பேசிடும் வரம் கேட்கிறேன்
அருகில் எனக்கும் ஒரு இடம் கேட்கிறேன்
தூரல் சிந்திடும் வான் மழையாய்
உன்னில் சேர்த்திடு ஒரு இலையாய்

# அம்மாவுக்கு

அகரம் அமுதன்

பத்துத்திங்கள் சுமந்தீன்று
பாசத்தைப் பொழிந்தவுன்றன்
கண்ணோரக் கதகதப்பில்
காலம்சில வாழ்ந்திருந்தேன்
*
சிறுவன்என் கைகளிலே
சிறகுகளைக் கட்டிவிட்டு
பணங்காசு சேர்க்கச்சொல்லி
பரதேசம் அனுப்பிவெச்சே
*
தனிமரமா ஆகிவிட்ட
தவிப்பினிலே நானிருக்க
மறந்துட்டியா? இன்னுசொல்லி
மடலொன்று வரைந்தவளே
*
உதட்டோடு முத்தமிட்டு
உசுரில்பாதி இட்டுவைத்துத்
திகட்டாத அன்புவெச்ச
தாயுன்னை மறப்பேனா?
*
தடத்தில்தான் பதியாதுன்
தளித்தோளில் தடம்பதித்து
நடைபயின்று நான்வளர்ந்த
நாட்களை மறப்பேனா?
*
வயிற்றில் சுமந்துகொண்டே
வயல்வெளியில் உழைத்தவுன்னை
வாயொடு வயிற்றைக்கட்டி
வளர்க்கப்பாடு பட்டவுன்னை
*
காலங்கள் மறந்திடலாம்
நாளங்கள் மறந்திடுமா
நெஞ்சமதை மறந்துவிட்டால்
நல்லகதி சேர்ந்திடுமா?
*
கடையாணி உடைந்துவிழ
கடைக்குட்டி வண்டிக்குக்கீழ
உடையாத மனமுடைந்து
மூர்ச்சையற்றுக் கிடந்தஅப்பன்
*
அறியாத பாலகன்நான்
தெரியாமல் தவறுசெய்ய
திட்டினால் திருந்தேனென்று
தூணில்கட்டித் தொலுரித்தார்
*
கேள்விப்பட்டு ஓடிவந்து
கோவென அழுதுகொண்டே
இரத்தக்கண்ணீர் வடித்தவுன்னை
இமைப்போதும் மறப்பேனா?
*
பெற்றபிள்ளை புத்திக்கெட்டுப்
பேசிய பேச்சையெல்லாம்
ஒத்தநொடிப் பொழுதுக்குள்ளே
பெற்றவள்நீ மறந்துடுவ
*
அத்தனையும் கனவில்வந்து
அம்புமழை பொழியுதம்மா
நித்தநித்தம் நினைவிலாட
நித்திரையும் போனதம்மா
*
நான்பிறந்த அப்புறம்பான்
நெல்லுசோற்றைக் கண்டோமென்ற
தித்திக்கும் சேதிசொல்லி
திருஷ்டிசுத்திப் போட்டவளே
*
நெல்லுசோற்றை விட்டுத்தள்ளு
நேசமனம் கொண்டவளே
நான்பிறந்த அப்புறம்நீ
நல்லசோறு தின்றதுண்டா?
*
ஆப்பரேஷன் தியேட்டரிலே
அம்மாநீ கிடக்கயிலே
அன்புமுகம் பார்ப்பதற்கு
அற்பனிவன் வந்ததில்லை
*
கருணையுள்ள தாய்மனது
கடுகளவும் கலங்கவில்லை
நினைத்தால் அழுகைவரும்
நதியூறும் கன்னத்திலே
*
மூன்று வயதிலநான்
உன்நெஞ்சில் உதைக்கயிலே
உதைத்த காலைச்சுற்றி
முன்னூறு முத்தம்வைப்பாய்
*
பதினாறு வயதுலநான்
படுத்திய பாடுக்கென்
பிணத்துக்கும் சாபம்சேரும்
பிணந்தின்னி விலகிஓடும்
*
ஆத்தா! அடி ஆத்தா!
நான்செத்தா கொல்லிவையி
முந்திக்கிட்டுப் போயிட்டேன்னா
பேரங்கிட்டச் சொல்லிவையி!
*

# ஆன்மாவின் வேலை என்ன ?

சிவனருள் கருணாகரன்

அன்புள்ள நண்பர்களே வணக்கம்.

“ஆன்மாவின் வேலையென்ன? எனும் கேள்விக்கு இங்கே எல்லோருக்கும் புரியும் வண்ணம் பதில் தர கடமைப்பட்டுள்ளேன்.

முதலில் ஆன்மா என்னவென்று அறிந்தால்தான் அது என்ன வேலையை செய்யும் என்று உணர முடியும்.

பிறப்பெடுத்துள்ள எல்லா ஜீவன்களுக்கும் ஒரே அளவில் அமைந்திருக்கும் ஆன்மா, பிறப்பெடுக்காத, பிறப்பெடுக்க இருக்கும் இன்னும் பல கோடி கோடி ஜீவன்களுக்கும் துணையாகி நிற்கின்றது.

நாம் படித்து, கேட்டு அறிந்த அனைத்து மகரிஷிகளும், ஞானிகளும், முனிவர்களும், புத்தர் முதல் சித்தர்கள் வரை ஆன்மாவை அழிவற்றது என்றும், ஆன்மாவே இறைசொரூபம் என்றும், உலகில் உள்ள உயிரினங்கள் அனைத்தும் ஆன்மவடிவே என்றெல்லாம் கண்டுணர்ந்து சொல்லி இருக்கின்றார்கள்.

இவ்வாறான ஆன்மாவின் பணி என்ன ?

ஆன்மா எல்லா உயிர்களையும் இயக்குகின்றதா ? பேசும் சக்தி பெற்ற மனித உயிர்களை அதுதான் வழி நடத்துகிறதா ? அதுதான் ஆறாம் அறிவா ? ஆன்மா என்பதுதான் உயிரா ? அது மனிதரை ஆள்கின்றதா ? என்பது போன்ற கேள்விகள் நம்முள் அடுக்கடுக்காக எழுகின்றதல்லவா !!

உண்மையில் ஆன்மா என்பது, மனிதனை ஆள்வதோ, இயக்குவதோ, வழிகாட்டியோ, மனிதனின் ஆறாம் அறிவோ இல்லை .அப்படியென்றால் பின் என்ன ?

மனிதர்களை இயக்குவது மனிதனின் மனம், ஆன்மா மனிதரை இயக்குவதாக இருந்தால் மனிதரிடம் தவறுகளோ, தோல்வியோ என்றுமே காண முடியாது.

மனிதரை வழி நடத்துவது அவனுடைய எண்ணங்களும், அவனின் கேள்வி ஞானமும் தான் . மனிதன் ஆன்மாவின் வழிகாட்டுதலில் பயணித்தால் தவறான பாதையில் செல்லும் வாய்ப்பு எந்நாளும் மனிதருக்கு ஏற்பட்டிருக்காது .

மனிதனின் ஆறாம் அறிவாக ஆன்மா இருக்க எள்முனையளவும் வாய்ப்பில்லை .

காரணம், உலகின் எல்லா உயிருக்குள்ளும் ஆன்மா இருகின்றது. ஆனால், பலவிதமான மிருக, பறவை இனங்களின் இனப்பெருக்க உறவுகள் மனிதனின் வழக்கத்திற்கு முற்றிலும் மாறாக இருக்கின்றது.

ஆன்மா என்பது உயிரல்ல என்பதில் மாற்றுக் கருத்தில்லை, ஏனெனில் உயிர் என்பது இந்த உடலோடு சம்பந்தப்பட்டது, ஆனால் ஆன்மா நம் பிறப்போடு தொடர்புடையது. நமது எந்த பாபமும் புண்ணியமும் ஆன்மாவை பாதிப்பதில்லை, ஆனால் உயிர் சம்பந்தமான இந்த உடலையும் மனதையும் மிகவும் பாதிக்கச் செய்கிறது.

அப்படியானால் என்னதான் இந்த ஆன்மா என்பது ?

## நினைவேடு

வைஷ்ணவ தேவி



தூய்மை படுத்தும்
பணி தொடங்கியது
வீட்டில்

வருடம் முழுதும்
என் மடியில் கிடத்தி
இருந்ததை பின்
முடிவில் ஒதுக்கி
வேறொன்றை எடுத்து
இனி அதனுடன்
மகிழ்ச்சியோடு
உறவாடி
இருக்கிறேன்.

நினைவுகளின்
சின்னமாய்
சிதறி கிடைக்கும்
என் பல சொந்தங்கள்
.

அவர்களோடு என்மன
அலைகளை பகிர்ந்து
கொண்ட தருணங்கள்
ஏனோ எட்டி
பார்க்கின்றன .

ஏதும் சொல்ல
இயலா வேளையில்
அனைத்தையும்
கொட்டி
தீர்த்த நேரங்கள் .

ஒவ்வொரு செயலின்
நியாயங்களும்; சில
நேரம் நியாயம்
தான் என்றும்.

எல்லாமே வாங்கி
கொண்டார்கள்;
என்மன
பிதற்றல்கள், களித்த
நினைவுகள்
அனைத்தையும் .

அவர்களை நான்
ஒதுக்கி போனாலும்
இன்று என்முன்
அனைத்தையும்
கண்ணெதிரில்
காட்சியாக்கிய படி
நிற்கிறார்கள் .

இவர்களால்
இன்றைய
பணி சற்று
தாமதம் ஆனது.
இதையும் எழுதி
வைக்கிறேன் என்
நாட்குறிப்பேட்டில்.

வேறொரு நாள்
மீண்டும் படித்து
மகிழ்ந்து இந்நாளை
நினைவில் கொள்ள.

ஆன்மா இந்நிலையிலிருந்து முற்றிலுமாக மாறுபட்டது.

நமது ஒவ்வொரு அசைவையும் முழுமையாக கவனித்து, நமது சொல்லோ, செயலோ, கவனமோ, சிந்தையோ தடம் மாறும் போது உள்ளிருந்து மிக பலவீனமான குரலில் நம்மை எச்சரிக்குமே ஒரு முனகல் குரல், ஞாபகம் இருக்கிறதா? அது நமது ஆன்மாவின் குரல்தான் .

மிரட்டும் தொனியில் இல்லாமல் கெஞ்சலிலும் கீழே மிக மெல்லியதாக நம்மை வேண்டாம் என்று தடுக்குமே அந்த குரல் நமது ஆன்மாவின் குரல்தான் .

சாதிக்க பிறந்தவன் நீ ஆனால் இப்படி உன்னை நீயே அழித்துக் கொள்கின்றாயே என்று எங்கோ தொலைவிலிருந்து யாரோ சொல்வதாக ஒரு குரல் நம் காதில் ஒலிக்குமே அது நமது ஆன்மாவின் குரல்தான்.

வெற்றியின் வித்தான நீ, தோல்வியின் மொத்த சொத்தாகி போகின்றாயே என ஈனஸ்வரத்தில் ஒரு ஓசை கேட்கின்றதே ! நமது மனதின் உள்ளே, அந்த ஒலியின் உரிமையாளன் நமது ஆன்மாதான்.

நாம் தவறிழைக்க துணிந்திடும் ஒவ்வொரு சமயமும் கொஞ்சமும் சலிப்பின்றி வேண்டாம் வேண்டாமென்று நம்மை காலில் விழாத குறையாக நம்மை காப்பாற்ற கதறுகின்றதே அந்த குரல் நமது ஆன்மாவின் குரல்தான்.

ஆன்மீக வாசல் திறந்திருக்க, அபாய வாசலை நோக்கி பயணிக்கின்றாயே என்று நல்ல பாதையை நமக்கு காட்டி, நமது கையை பிடித்து நல்வழி செல்ல அழைக்கின்றதே அந்தக்குரல் நமது ஆன்மாவின் அன்புகுரல்தான்.

இப்பிறப்பில் ஆன்ம உயிர்ப்பு இல்லாதபோது வரும் பிறப்பிலாவது நாம் இறையுணர்வில் ஆழ்ந்திட நம்மை விடாமல் பற்றிக் கொண்டு நம்மோடு ஒவ்வொரு பிறப்பிலும் தொடர்ந்து நம்மோடு பயணிக்கும் உற்ற துணை யார் தெரியுமா ? நமது ஆன்மாதான்.

ஆன்மீக நெறியில் ஆழ்ந்து போகும் அன்பர்களுக்கு அவர்கள் யார் என்று உணர்த்தி, முற்பிறப்பில் யாராக இருந்து இறந்தோம், இப்பிறப்பில் எதற்காக பிறந்து வளர்ந்தோம் என உணர்த்துகின்றதே ஒரு தெய்வீக ஒளி அது நமது ஆன்மாவின் ஒளிதான்.

தவ, யோக, த்யான, நியம நிஷ்டையில் மூழ்கி திளைக்கையில், உள்ளிருந்து ஆனந்த பேரலையாக எழுந்து, உடல் முழுவதும் பரவி, மனமும், உடலும் காணாமல் போய், காயமே இது பொய்யடா என மெய்ப்பித்து, இறைவா, இறைவா என்ன இந்த இன்பநிலை ! மானிட பிறப்பில் இப்படியும் அதிசயமா, எனக்கா, இது நானா, என்னாலும் இது சாத்தியமா என ஆனந்த பித்தனாக்கி நம்மை நமக்கு அடையாளம் காட்டப்பட உதவுகிறதே அதன் உள்ளார்ந்த வித்து நமது ஆன்மாதான்.

அடையாளம் காட்டப்பட்ட மனிதன் தன்னுணர்வை அடைந்து இனியும் தாமதிக்காமல் இறைவழியில் நடந்து இறைவனின் பதம் நாட வேண்டும் என எண்ணி துதித்து, மனமுருகி, மெய்யொன்றி அதன் வழி செல்ல முற்படும் போது ஒரு புத்தம்புது பூவை கையிலெடுப்பதுபோல் நம்மை எடுத்து இறைவழியில் நாம் செல்லுவதற்கு இறுதிவரை உடன் வரும் துணை யார் தெரியுமா ? நமது ஆன்மாதான்.

இப்போது தெரிகிறதா ? ஆன்மாவின் வேலையென்ன என்று !!!!!

உங்கள் ஆன்மா சொல்வதை கேளுங்கள், அன்பு வழி செல்லுங்கள் . பேரானந்த அலையில் ஆடுங்கள், பேரின்ப அற்புதங்களை கண்டு உணருங்கள் .

வாழுங்கள் வளமோடு வாழும் நாளெல்லாம்.

# சுதந்திரம்...

காரை.கே.பீலே. விஜயன்

*காந்தி வாங்கினார்*
*வால்மார்ட் கம்பெனிகள்*
*சொந்தம் கொண்டாடின...*

*வாழ்வைத் தொலைத்த*
*தியாகிகள்*
*கோஷம் போட்டார்கள்*
*பேரப்பிள்ளைகளுக்கு*
*ஒதுக்கீடு கேட்டு...*

*குடிமகன்கள்*
*வாக்குகளை விற்று*
*வயிறு நிரப்பினர்*
*டாஸ்மார்க் கடையில்...*

*எழவு வீட்டில்*
*இலவச டிவி*
*பாடியது*
*எறந்தவன சொமந்தவனும்*
*எறந்துட்டான்...*

*பள்ளிச் சிறுவர்கள்*
*ப்ளாஸ்டி பொறுக்கி*
*குடும்பம் சுமந்தனர்...*
*இந்தியாவின்*
*சுதேசி வரலாற்றைப்*
*பதிப்பிக்க*
*அன்னிய கம்பெனிகள்*
*ஸ்பான்சர் செய்தன...*

*கடைக்காரன் சொன்னான்*
*விலவாசியெல்லாம்*
*ஏறிப்போச்சும்மா...*
*அம்மா நினைத்துக் கொண்டாள்*
*ஆமாம்...ஆமாம்...*
*நூறு. ஆயிரமாய்*
*இருந்த ஊழல்*
*லட்சங்கோடியாய்*

*மாறிப்போச்சே...!*

*வாங்கிய ரூபாயை*
*முந்தானையில்*
*முடிந்துகொண்டு*
*போலீஸ்மீது*
*எறிவதற்காக*
*கல் பொறுக்கிய*
*தாயிடம்*
*சொன்னான்*
*தூங்கப்போறேம்மா...*
*காலைல*
*சாலைமறியல்*
*வேலைக்குப் போகணும்...*

*கொடியேற்றி*
*மிட்டாய் கொடுத்தார்கள்*
*என் பையன்*
*கேட்டான்*
*இந்தியா*
*சுதந்திர தேசம்தானே*
*அப்பா...???*

## முகப்பு படம்



**ஓவியம் வரைந்து அனுப்பியவர்: வித்யாபரன்**

நீங்களும் நீங்கள் எடுத்த சிறந்த படங்களை மின்னிதழுக்காக அனுப்பி வைக்கலாம்.

"மின் இதழை படித்து இரசித்தமைக்கு நன்றிகள்"

*தங்கள் பதிவுகள் மின் இதழை சிறப்பிக்க வேண்டுமா?*

*தங்கள் பதிவுகளும் மின் இதழில் பங்கு பெற்று சிறப்பிக்க நாங்கள் விரும்புகிறோம்.*

1. தளத்தில் சிறப்புப்பதிவாக தெரிவு செய்யப்படும் படி சிறந்த கருத்தை வைத்து பதிவுகளை எழுதுங்கள்
2. அதிக புள்ளிகள் பெற்று முதல் இருபது பதிவுகளுக்குள் தங்கள் பதிவுகள் வருமாறு சிறந்த கருத்துகள் கொண்ட பதிவு செய்யுங்கள்.
3. வேறு இடங்களில் பதியப்படாத பதிவுகளுக்கு முன்னுரிமை அளிக்கப்படும்.

*மீண்டும் வழக்கம் போல அடுத்த மின் இதழில் சந்திப்போம்.*

*இதழையும் தமிழ் நண்பர்களையும் பற்றிய தங்கள் மேலான கருத்துகளை தயவு செய்து info@tamilnanbargal.com என்ற முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.*

*நன்றிகள்*
*தமிழ் நண்பர்கள்*
tamilnanbargal.com

இதழ் சம்பந்தமான
பரிந்துரைகளுக்கோ அல்லது
விளம்பரங்களுக்கோ
info@tamilnanbargal.com என்ற
முகவரிக்கு அஞ்சல் செய்யவும்.

இம்மின் இதழை பதிவுகள்
எழுதி சிறப்பித்த அனைத்து
நண்பர்களுக்கும் எங்கள்
நன்றி நன்றி நன்றி!

**tamilnanbargal.com**